உயிர்போயார் வெண்டலை யுட்கக் சிரித்துச்
செயிர் தீர்க்கும் செம்மாப் பவரைச்—செயிர் தீர்ந்தார்
கண்டுஇற்று இதன் வண்ணம் என்பதனுல் தம்மையோர்
பண்டத்துள் வைப்பது இலர். 50

## அதிகாரம் 6—துறவு

விளக்குப் புகஇருள் மாய்ந்தாங்கு ஒருவன்
தவத்தின் முன் நில்லாதாம் பாவம்—விளக்குநெய்
தேய்விடத்துச் சென்றிருள் பாய்ந்தாங்கு நல்வினை
தீர்விடத்து நிற்குமாம் தீது. 51

நிலையாமை நோய்மூப்புச் சாக்காடென் றெண்ணித்
தலையாயார் தங்கருமஞ் செய்வார்—தொலைவில்லாச்
சத்தமும் சோதிடமும் என்றாங்கு இவை பிதற்றும்
பித்தரின் பேதையார் இல். 52

இல்லம் இளமை எழில் வனப்பு மீக்கூற்றம்
செல்வம் வலியென்று இவையெல்லாம்—மெல்ல
நிலையாமை கண்டு நெடியார் துறப்பர்
தலையாயார் தாமுய்யக் கொண்டு. 53

துன்பம் பல நாள் உழந்தும் ஒரு நாளை
இன்பமே காமுறுவர் ஏழையார்—இன்பம்
இடைதெரிந்து இன்னுமை நோக்கி மனையாறு
அடைவொழிந்தார் ஆன்றமைந் தார். 54

கொன்னே கழிந்தன்று இளமையுங் இன்னே
பிணியொடு மூப்பும் வருமால்—துணிவொன்றி
என்னொடு சூழாது எழு நெஞ்சே போதியோ
நன்னெறி சேர நமக்கு. 55

மாண்ட குணத்தொடு மக்கட்பேறு இல்லெனினும்
பூண்டான் கழித்தற்கு அருமையால்—பூண்ட
மிடியென்னும் காரணத்தின் மேன்முறைக் கண்ணே
கடியென்றார் கற்றறிந் தார். 56

ஊக்கித்தாம் கொண்ட விரதங்கள் உள்ளுடையத்
தாக்கருந் துன்பங்கள் தாம்தலை வந்தக்கால்
நீக்கி நிறூஉம் உரவோரே நல்லொழுக்கம்
காக்கும் திருவத் தவர். 57

தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்று
எம்மை இகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை
எரிவாய் நிரயத்துவீழ்வர்கொல் என்று
பரிவதூஉம் சான்றோர் கடன். 58

மெய்வாய்கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற
ஐவாய வேட்கை யாவினைக்- -கைவாய்
கலங்காமல் காத்துய்க்கும் ஆற்றல் உடையான்
விலங்காது வீடு பெறும். 59

துன்பமே மீதூரக் கண்டும் துறவுள்ளார்
இன்பமே காமுறுவர் ஏழையார்—இன்பம்
இசைதொறும் மற்றதன்' இன்னாமை நோக்கிப்
பசைதல் பரியாதாம் மேல். 60

## அதிகாரம் 7 சினம் இன்மை

மதித்திறப் பாரும் இறக்க மதியா
மிதித்திறப் பாரும் இறக்க—மிதித்தேறி
ஈயும் தலைமேல் இருத்தலால் அஃதறிவார்
காயும் கதமின்மை நன்று. 61

தண்டாச் சிறப்பிற்றம் இன்னுயிரைத் தாங்காது
கண்டுழி யெல்லாம் துறப்பவோ—மண்டி
அடிபெயராது ஆற்ற இளிவந்த போழ்தின்
முடிகிற்கும் உள்ளத் தவர். 62

காவாது ஒருவன்றன் வாய்திறந்து சொல்லுஞ்சொல்
ஓவாதே தன்னைச் சுடுதலால் ஓவாதே
ஆய்ந்தமைந்த கேள்வி யறிவுடையார் எஞ்ஞான்றும்
காய்ந்தமைந்த சொல்லார் கறுத்து. 63

நேர்த்து நிகரல்லார் நீரல்ல சொல்லியக்கால்
வேர்த்து வெகுளார் விழுமியோர்—ஓர்த்ததனை
உள்ளத்தான் உள்ளி உரைத்துராய் ஊர்கேட்பத்
துள்ளித்தூண் முட்டுமாம் கீழ். 64

இளையான் அடக்கம் அடக்கம் கிளைபொருள்
இல்லான் கொடையே கொடைப்பயன்—எல்லாம்
ஒறுக்கும் மதுகை யுரனுடை யாளன்
பொறுக்கும் பொறையே பொறை. 65

கல்லெறிந் தன்ன கயவர்வாய் இன்னுச் சொல்
எல்லாரும் காணப் பொறுத்துய்ப்பர்—ஒல்லை
ற்ருல் பையவிந்த நாகம்போல் தத்தம்
குடிமையான் வாதிக்கப் பட்டு. 66

மாற்ருராய் நின்றுதம் மாறேற்பாற்கு ஏலாமை
,ற்ருமை யென்னுர் அறிவுடையார்—ஆற்ருமை
நேர்த்தின்ன மற்றவர் செய்தக்கால் தாமவரைப்
பேர்த்தின்ன செய்யாமை நன்று. 67

ங்காலம் ஓடினும் நீசர் வெகுளி
கடுங்காலம் இன்றிப் பரக்கும்—அடுங்காலை
ர்கொண்ட வெப்பம்போல் தானே தணியுமே
ர்கொண்ட சான்ருேர் சினம். 68

பகாரம் செய்ததனை யோராதே தங்கண்
பகாரம் ஆற்றச் செயினும்—உபகாரம்
ரஞ்செய்வ தல்லால் தவற்றினுல் தீங்கூக்கல்
ான்ருேய் குடிப்பிறந்தார்க்கு இல். 69

ர்த்துநாய் கொளவிக் கொளக்கண்டும் தம்வாயால்
பர்த்துநாய் கௌவினர் ஈங்கில்லை—ஈர்த்தன்றிக்
ழ் மக்கள் கீழாய சொல்லியக்கால் சொல்பவோ
மன்மக்கள் தம்வாயான் மீட்டு. 70

# 2. இல்லறவியல்

## அதிகாரம் 8 – பொறையுடைமை

கோதை யருவிக் குளிர்வரை நன்னாட
பேதையொடு யாதும் உரையற்க —பேதை
உரைக்கின் சிதைந்துரைக்கும் ஒல்லும் வகையான்
வழுக்கிக் கழிதலே நன்று. 71

நேரல்லார் நீரல்ல சொல்லியக்கால் மற்றது
தாரித் திருத்தல் தகுதிமற்று—ஓரும்
புகழ்மையாக் கொள்ளாது பொங்குநீர் ஞாலம்
கமழ்மையாக் கொண்டு விடும். 72

காதலார் சொல்லும் கடுஞ்சொல் உவந்துரைக்கும்
ஏதிலார் இன்சொலின் தீதாமோ — போதெலாம்
மாதர்வண்டு ஆர்க்கும் மலிகடல் தண்சேர்ப்ப
ஆவது அறிவார்ப் பெறின். 73

அறிவது அறிந்தடங்கி அஞ்சுவது அஞ்சி
உறுவது உலகுவப்பச் செய்து —பெறுவதனால்
இன்புற்று வாழும் இயல்புடையார் எஞ்ஞான்றும்
துன்புற்று வாழ்தல் அரிது. 74

வேற்றுமை யின்றிக் கலந்திருவர் நட்டக்கால்
தேற்றா வொழுக்கம் ஒருவன்கண் உண்டாயின்
ஆற்றுந் துணையும் பொறுக்க பொறானாயின்
தூற்றாதே தூரவிடல். 75

இன்னா செயினும் இனிய வொழிகென்று
தன்னையே தானோவின் அல்லது —துன்னிக்
கலந்தாரைக் கைவிடுதல் கானக நாட
விலங்கிற்கும் விள்ளல் அரிது. 76

பெரியார் பெருநட்புக் கோடல்தாம் செய்த
அரிய பொறுப்பவென் றன்றோ —அரியரோ
ஒல்லென் அருவி உயர்வரை நன்னாட
நல்ல செய்வார்க்குத் தமர். 77

வற்றிமற்று ஆற்றப் பசிப்பினும் பண்பிலார்க்கு
அற்றம் அறிய வுரையற்ற—அற்றம்
மறைக்கும் துணையாக்கு உரைப்பவே தம்மைத்
துறக்கும் துணிவிலா தார், 78

இன்பம் பயந்தாங்கு இழிவு தலைவரினும்
இன்பத்தின் பக்கம் இருந்தைக்க—இன்பம்
ஒழியாமை கண்டாலும் ஓங்கருவி நாட
பழியாகா ஆறே தலை. 79

தான்கெடினும் தக்கார்கேடு எண்ணற்க தன்னுடம்பின்
ஊன்கெடினும் உண்ணார்கைத்து உண்ணற்க—வான்கவிந்த
வையகம் எல்லாம் பெறினும் உரையற்க
பொய்யோடு இடைமிடைந்த சொல். 80

## அதிகாரம் 9—பிறர்மனை நயவாமை

அச்சம் பெரிதால் அதற்கின்பம் சிற்றளவால்
நிச்சம் நினையுங்கால் கோக்கொலையால்—நிச்சலும்
கும்பிக்கே கூர்த்த வினையால் பிறன்தாரம்
நம்பற்க நாணுடையார். 81

அறம்புகழ் கேண்மை பெருமையிந் நான்கும்
பிறன்தாரம் நச்சுவார்ச் சேரா—பிறன்தாரம்
நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவமென்று
அச்சத்தோடு இந்நாற் பொருள். 82

புக்கவிடத்து அச்சம் போதரும்போது அச்சம்
துய்க்குமிடத்து அச்சம் தோன்றாமல் காப்பச்சம்
எக்காலும் அச்சம் தருமால் எவன்கொலோ
உட்கான் பிறனில் புகல். 83

காணின் குடிப்பழியாம் கையுறின் கால்குறையும்
ஆண்இன்மை செய்யுங்கால் அச்சமாம்—நீள்நிரயத்
துன்பம் பயக்குமால் துச்சாரி நீ கண்ட
இன்பம் எனக்கெனைத்தால் கூறு. 84

செம்மையொன் றின்றிச் சிறியார் இனத்தராய்க்
கொம்மை வரிமுலையாள் தோள்மரீஇ—உம்மை
வலியால் பிறர்மனைமேல் சென்றாரே இம்மை
அலியாகி ஆடியுண் பார். 85

பல்லார் அறியப் பறையறைந்து நாள்கேட்டுக்
கல்யாணம் செய்து கடிபுக்க—மெல்லியல்
காதல் மனையாளும் இல்லாளா என்னொருவன்
ஏதில் மனையாளை நோக்கு. 86

அம்பல் அயலெடுப்ப அஞ்சித் தமர்பரீஇ
வம்பலன் பெண்மரீஇ மைந்துற்று—நம்பும்
நிலைமையில் நெஞ்சத்தான் துப்புரவு பாம்பின்
தலைநக்கி யன்னது உடைத்து. 87

பரவா வெளிப்படா பல்லோர்கண் தங்கா
உரவோர்கண் காமநோய் ஓஒ கொடிதே
விரவாருள் நாணுப் படலஞ்சி யாதும்
உரையாதுள் ஆறி விடும். 88

அம்பும் அழலும் அவிர்கதிர் ஞாயிறும்
வெம்பிச் சுடினும் புறஞ்சுடும்—வெம்பிக்
கவற்றி மனத்தைச் சுடுதலால் காமம்
அவற்றினும் அஞ்சப் படும். 89

ஊருள் எழுந்த உருகெழு செந்தீக்கு
நீருட் குளித்தும் உயலாகும்—நீருள்
குளிப்பினும் காமம் சுடுமேகுன் றேறி
ஒளிப்பினும் காமம் சுடும். 90

## அதிகாரம் 10—ஈகை

இல்லா இடத்தும் இயைந்த அளவினால்
உள்ள இடம் போல் பெரிதுவந்து—மெல்லக்
கொடையொடு பட்ட குணனுடை மாந்தர்க்கு
அடையாவாம் ஆண்டைக் கதவு. 91

முன்னரே சாநாள் முனிதக்க மூப்புள
பின்னரும் பீடழிக்கும் நோயுள—கொன்னே
பரவமின் பற்றன்மின் பாத்துண்மின் யாதும்
கரவன்மின் கைத்துண்டாம் போழ்து. 92

நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பம் துடையார்
கொடுத்துத் தான் துய்ப்பினும் ஈண்டுங்கால் ஈண்டும்
மிடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம்
விடுக்கும் வினையுலந்தக் கால். 93

இம்மி யரிசித் துணையானும் வைகலும்
நும்மில் இயைவ கொடுத்துண்மின்—நும்மைக்
கொடாஅ கவரென்பர் குண்டுநீர் வையத்து
அடாஅ அடுப்பினவர். 94

மறுமையும் இம்மையும் நோக்கி ஒருவற்கு
உறுமாறு இயைவ கொடுத்தல்—வறுமையால்
ஈதல் இசையாது எனினும் இரவாமை
ஈதல் இரட்டிறும். 95

நடுவூருள் வேதிகை சுற்றுக்கோள் புக்க
படுபனை அன்னர் பலர்நச்ச வாழ்வார்
குடிகொழுத்தக் கண்ணும் கொடுத்துண்ணா மாக்கள்
இடுகாட்டுள் ஏற்றைப் பனை. 96

பெயற்பால் மழைபெய்யாக் கண்ணும் உலகம்
செயற்பால செய்யா விடினும்—கயற்புலால்
புன்னை கடியும் பொருகடல் தண்சேர்ப்ப
என்னை உலகுய்யும் ஆறு. 97

ஏற்றகை மாற்றாமை என்னானும் தாம் வரையார்
ஆற்றாதார்க்கு ஈவதாம் ஆண்கடன்—ஆற்றின்
மலிகடல் தண்சேர்ப்ப மாறீவார்க்கு ஈதல்
பொலிகடன் என்னும் பெயர்த்து. 98

இறப்பச் சிறிதென்னாது இல்லென்னாது என்றும்
அறப்பயன் யார்மாட்டும் செய்க—முறைப்புதவின்
ஐயம் புகூஉம் தவசி கடிஞைபோல்
பைய நிறைத்து விடும். 99

கடிப்பிடு கண்முரசம் காதத்தோர் கேட்பர்
இடித்து முழங்கியதோர் யோசனையோர் கேட்பர்
அடுக்கிய மூவுலகும் கேட்குமே சான்றோர்
கொடுத்தார் எனப்படுஞ்சொல். 100

## அதிகாரம் 11—பழவினை

பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று
வல்லதாம் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப்
பழவினையும் அன்ன தகைத்தே தன் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு. 101

உருவும் இளமையும் ஒண்பொருளும் உட்கும்
ஒருவழி நில்லாமை கண்டும்—ஒருவழி
ஒன்றேயும் இல்லாதான் வாழ்க்கை உடம்பிட்டு
நின்றுவீழ்ந் தக்கது உடைத்து. 102

வளம்பட வேண்டாதார் யார் யாரும் இல்லை
அளந்தன போகம் அவரவர் ஆற்றான்
விளங்காய் திரட்டினார் இல்லைக் களங்கனியைக்
காரெனச் செய்தாரும் இல். 103

உறற்பால நீக்கல் உறுவர்க்கும் ஆகா
பெறற்பால் அனையவும் அன்னவாம் மாரி
வறப்பின் தருவாரும் இல்லை அதனைச்
சிறப்பின் தணிப்பாரும் இல். 104

தினைத்துணையர் ஆகித்தம் தேசுள் அடக்கிப்
பனைத் துணையார் வைகலும் பாடழிந்து வாழ்வர்
நினைப்பக் கிடந்தது எவனுண்டாம் மேலை
வினைப்பயன் அல்லால் பிற 105

பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் வீயவுங்
கல்லாதார் வாழ்வது அறிதிரேல்—கல்லாதார்
சேதனம் என்னுமங் சேறகத்து இன்மையால்
கோதென்று கொள்ளாதாம் கூற்று. 106

இடும்பைகூர் நெஞ்சத்தார் எல்லாரும் காண
நெடுங்கடை நின்றுழல்வ தெல்லாம்—அடம்பம்பூ
அன்னம் கிழிக்கும் அலைகடல் தண்சேர்ப்ப
முன்னை வினையாய் விடும். 107

அறியாரும் அல்லர் அறிவது அறிந்தும்
பழியோடு பட்டவை செய்தல்—வழியோடி
நெய்தல் நறவுயிர்க்கும் நீள் கடல் தண்சேர்ப்ப
செய்த வினையான் வரும். 108

ஈண்டுநீர் வையத்துள் எல்லாரும் எத்துணையும்
வேண்டார்மன் தீய விழைபயன் நல்லவை
வேண்டினும் வேண்டா விடினும் உறற்பால
தீண்டா விடுதல் அரிது. 109

சிறுகா பெருகா முறைபிறழ்ந்து வாரா
உறுகாலத்து ஊற்றுகா ஆமிடத்தே யாகும்
சிறுகாலைப் பட்ட பொறியும் அதனால்
இறுகாலத்து என்னை பரிவு. 110

## அதிகாரம் 12 – மெய்ம்மை

இசையா வொருபொருள் இல்லென்றல் யார்க்கும்
வசையன்று வையத் தியற்கை—நசையழுங்க
நின்றோடிப் பொய்த்தல் நிரைதொடீஇ செய்ந்நன்றி
கொன்றாரின் குற்றம் உடைத்து. 111

தக்காரும் தக்கவர் அல்லாரும் தம்நீர்மை
எக்காலும் குன்றல் இலராவர் அக்காரம்
யாவரே தின்னினும் கையாதாம் கைக்குமாம்
தேவரே தின்னினும் வேம்பு. 112

காலாடு போழ்தில் கழிகிளைஞர் வானத்து
மேலாடு மீனில் பலராவர்—ஏலா
இடரொருவர் உற்றக்கால் ஈர்ங்குன்ற நாட
தொடர்புடையேம் என்பார் சிலர். 113

வடுவிலா வையத்து மன்னிய மூன்றில்
நடுவணது எய்த இருதலையும் எய்தும்
நடுவணது எய்தாதான் எய்தும் உலைப்பெய்து
அடுவது போலும் துயர். 114

நல்லாவின் கன்றாயின் நாகும் விலைபெறூஉம்
கல்லாரே யாயினும் செல்வர்வாய்ச் சொல்செல்லும்
புல்லீரப் போழ்தின் உழவே போல் மீதாடிச்
செல்லாவாம் நல்கூர்ந்தார் சொல். 115

இடம்பட மெய்ஞ்ஞானம் கற்பினும் என்றும்
அடங்காதார் என்றும் அடங்கார்—தடங்கண்ணாய்
உப்பொடு நெய்பால் தயிர்காயம் பெய்தடினும்
கைப்பறா பேய்ச்சுரையின் காய். 116

தம்மை யிகழ்வாரைத் தாமவரின் முன்னிகழ்க
என்னை யவரொடு பட்டது—புன்னை
விறற்பூங் கமழ்கானல் வீங்குநீர்ச் சேர்ப்ப
உறற்பால யார்க்கும் உறும். 117

ஆவேறு உருவின ஆயினும் ஆபயந்த
பால்வேறு உருவின அல்லவாம் பால்போல்
ஒருதன்மைத் தாகும் அறநெறி ஆபோல்
உருவு பலகொளல் ஈங்கு. 118

யாஅர் உலகத்தோர் சொல்லில்லார் தேருங்கால்
யாஅர் உபாயத்தின் வாழாதார்—யாஅர்
இடையாக இன்னாதது எய்தாதார் யாஅர்
கடைபோகச் செல்வமுய்த் தார். 119

தாம்செய் வினையல்லால் தம்மோடு செல்வதுமற்று
யாங்கணும் தேரின் பிறிதில்லை—ஆங்குத்தாம்
போற்றிப் புனைந்த உடம்பும் பயமின்றே
கூற்றம்கொண்டு ஓடும் பொழுது. 120

## அதிகாரம் 13—தீவினையச்சம்

துஞ்சுத்துள் தூங்கித் துறவின்கண் சேர்கலா
மக்கள் பிணத்த சுடுகாடு—தொக்க
விலங்கிற்கும் புள்ளிற்கும் காடே புலங்கெட்ட
புல்லறி வாளர் வயிறு. 121

இரும்பார்க்கும் காலராய் ஏதிலார்க்கு ஆளாய்க்
கரும்பார் கழனியுள் சேர்வர்—சுரும்பார்க்கும்
காட்டுளாய் வாழும் சிவலும் குறும்பூழும்
கூட்டுளாய்க் கொண்டு வைப் பார். 122

அக்கேபோல் அங்கை யொழிய விரலழுகித்
துக்கத் தொழுநோய் எழுபவே—அக்கால்
அலவனைக் காதலித்துக் கால் முரித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால். 123

நெருப்பழல் சேர்ந்தக்கால் நெய்போல் வதூஉம்
எரிப்பச்சுட்டு எவ்வநோய் ஆக்கும்—பரப்பக்
கொடுவினையர் ஆகுவர் கோடாரும் கோடிக்
கடுவினையர் ஆகியார்ச் சார்ந்து. 124

பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்—வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே
தானே சிறியார் தொடர்பு. 125

சான்றோ ரெனமதித்துச் சார்ந்தாய்மற் சார்ந்தாய்க்குச்
சான்றாண்மை சார்ந்தார்க ணில்லாயிற்—சார்ந்தோய்கேள்
சாந்தகத் துண்டென்று செப்புத் திறந்தொருவன்
பாம்பகத்துக் கண்ட துடைத்து. 126

யாஅ ரொருவ ரொருவர்த முள்ளத்தைத்
தேருந் துணைமை யுடையவர்—சாரற்
கனமணி நின்றிமைக்கு நாடகேண் மக்கண்
மனம்வேறு செய்கையும் வேறு. 127

உள்ளத்தா னள்ளா துறுதித் தொழிலராய்க்
கள்ளத்தா னட்டார் கழிகேண்மை—தெள்ளிப்
புனற்செதும்பு நின்றலைக்கும் பூங்குன்ற நாட
மனத்துக்கண் மாசாய் விடும். 128

ஒக்கிய வொள்வாட னொன்னார்கைப் பட்டக்கா
லூக்க மழிப்பதூஉ மெய்யாகு—மாக்க
மிருமையுஞ் சென்று சுடுதலா னல்ல
கருமமே கல்லார்கட் டீர்வு. 129

மனைப்பாசங் கைவிடாய் மக்கட்கென் றேங்கி
யெனைத்தூழி வாழ்தியோ நெஞ்சே—யெனைத்துஞ்
சிறுவரையே யாயினுஞ் செய்தநன் றல்லா
லுறுபயனோ வில்லை யுயிர்க்கு. 130

# பொருட் பால்

## 1. அரசியல்

### அதிகாரம்—14 கல்வி

குஞ்சி யழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையால்
கல்வி யழகே யழகு. 131

இம்மை பயக்குமால் ஈயக் குறைவின்றால்
தம்மை விளக்குமால் தாம் உளராக் கேடின்றால்
எம்மை உலகத்தும் யாம்காணேம் கல்விபோல்
மம்மர் அறுக்கும் மருந்து. 132

களர்நிலத் துப்பிறந்த வுப்பினைச் சான்றோர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்
கடைநிலத்தோர் ஆயினும் கற்றறிந் தோரைத்
தலைநிலத்து வைக்கப் படும். 133

வைப்புழிக் கோட்படா வாய்த்தீயின் கேடில்லை
மிக்க சிறப்பின் அரசர் செறின்வவ்வார்
எச்சம் எனவொருவன் மக்கட்குச் செய்வன
விச்சை மற்று அல்ல பிற. 134
கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கின் பிணிபல—தெள்ளிதின்
ஆராய்ந்து அமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகின் தெரிந்து. 135
தோணி யியக்குவான் தொல்லை வருணத்துக்
காணின் கடைப்பட்டான் என்றிகழார்—காணாய்
அவன் துணையா ஆறுபோய் அற்றே நூல் கற்ற
மகன் துணையா நல்ல கொளல். 136
தவலரும் தொல்கேள்வித் தன்மை யுடையார்
இகலிலர் எஃகுடையார் தம்முள் குழீஇ
நகலின் இனிதாயின் காண்பாம் அகல் வானத்து
உம்பர் உறைவார் பதி. 137
கனைகடல் தண் சேர்ப்ப கற்றறிந்தார் கேண்மை
நுனியில் கரும்புதின் றற்றே—நுனிநீக்கித்
தூரில்தின் றன்ன தகைத்தரோ பண்பிலா
ஈரம் இலாளர் தொடர்பு. 138
கல்லாரே யாயினும் கற்றாரைச் சேர்ந் தொழுகின்
நல்லறிவு நாளும் தலைப் படுவர்—தொல் சிறப்பின்
ஒண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலால் புத்தோடு
தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு. 139
அலகுசால் கற்பின் அறிவுநூல் கல்லாது
உலகுநூல் ஓதுவ தெல்லாம்—கலகல
கூஉம் துணையல்லால் கொண்டு தடுமாற்றம்
போஒம் துணையறிவார் இல். 140

## அதிகாரம் 15—குடிப்பிறப்பு

உடுக்கை யுலறி யுடம்பழிந்தக் கண்ணும்
குடிப்பிறப் பாளர்தம் கொள்கையில் குன்றார்

இடுக்கண் தலைவந்தக் கண்ணும் அரிமா
கொடிப்புல் கறிக்குமோ மற்று. 141
சான்றாண்மை சாயல் ஒழுக்கம் இவைமூன்றும்
வான்றோய் குடிப்பிறந்தார்க் கல்லது—வான்தோயும்
மைதவழ் வெற்படாஅ பெருஞ்செல்வம்
எய்தியக் கண்ணும் பிறர்க்கு. 142
க்கை யெழலும் எதிர் செலவும் ஏனை
)ப்ப வொழிதலோடு இன்ன—குடிப்பிறந்தார்
குன்றா வொழுக்கமாகக் கொண்டார் கயவரோடு
ஒன்றா வுணரற்பாற்று அன்று. 143
நல்லவை செய்யின் இயல்பாகும் தீயவை
பல்லவர் தூற்றும் பழியாகும்—எல்லாம்
உணரும் குடிப்பிறப்பின் ஊதியம் என்றோ
புணரும் ஒருவர்க்கு எனின். 144
கல்லாமை அச்சம் கயவர் தொழில் அச்சம்
சொல்லாமை யுள்ளுமோர் சோர்வச்சம்—எல்லாம்
இரப்பார்க்கொன் றீயாமை யச்சம் மரத்தார்இம்
மாணாக் குடிப்பிறந் தார். 145
இனநன்மை யின்சொலொன் றீதல்மற் றேனை
மனநன்மை யென்றிவை யெல்லாம்—கனமணி
முத்தோடு இமைக்கும் முழங்குவரித் தண்சேர்ப்ப
இற்பிறந்தார் கண்ணே யுள. 146
செய்கை யழிந்து சிதல்மண்டிற் றாயினும்
பெய்யா வொருசிறை பேரில் உடைத்தாகும்
எவ்வம் உழந்தக் கடைத்தும் குடிப்பிறந்தார்
செய்வர் செயற்பா லவை. 147
ஒருபுடை பாம்பு கொளினும் ஒருபுடை
அங்கண்மா ஞாலம் விளக்குறூஉம் திங்கள் போல்
செல்லாமை செவ்வன்நேர் நிற்பினும் ஒப்புரவிற்கு
ஒல்கார் குடிப்பிறந் தார். 148
செல்லா இடத்தும் குடிப்பிறந்தார் செய்வன
செல்லிடத்தும் செய்யார் சிறியவர்—புல்வாய்

பருமம் பொறுப்பினும் பாய்பரி மாபோல்
பொருமுரண் ஆற்றுதல் இன்று. 149
என்றொன்றும் இல்லா இடத்தும் குடிப்பிறந்தார்
அற்றுத்தன் சேர்ந்தார்க்கு அசைவிடத்து ஊற்றாவர்
அற்றக் கடைத்தும் அகல்யாறு அகழ்ந்தக்கால்
தெற்றெனத் தெண்ணீர் படும். 150

## அதிகாரம் 6 — மேன்மக்கள்

அங்கண் விசும்பின் அகல்நிலாப் பாரிக்கும்
திங்களும் சான்றோரும் ஒப்பர்மன் — திங்கள்
மறுவாற்றும் சான்றோரஃதாற்றார் தெருமந்து
தேய்வர் ஒரு மாசு உறின். 151
இசையும் எனினும் இசையாது எனினும்
வசைதீர எண்ணுவர் சான்றோர் — விசையின்
நரிமா வுளங்கிழித்த அம்பினில் தீதோ
அரிமாப் பிழைப்பெய்த கோல். 152
நரம்பெழுந்து நல்கூர்ந்தார் ஆயினும் சான்றோர்
குரம்பெழுந்து குற்றம் கொண்டு ஏறார் — உரங்கவறா
உள்ளமெனும் நாரினால் கட்டி யுளவரையால்
செய்வர் செயற்பா லவை. 153
செல்வுழிக் கண்ணொருநாள் காணினும் சான்றவர்
தொல்வழிக் கேண்மையில் தோன்றப் புரிந்துயாப்பர்
நல்வரை நாட சிலநாள் அடிப்படில்
கல்வரையும் உண்டாம் நெறி. 154
புல்லா எழுத்தின் பொருளில் வறுங்கோட்டி
கல்லா வொருவன் உரைப்பவும் கண்ணோடி
நல்லார் வருந்தியும் கேட்பரே மற்றவன்
பல்லாருள் நாணல் பரிந்து. 155
கடித்துக் கரும்பினைக் கண்தகர நூறி
இடித்துநீர் கொள்ளினும் இன்சுவைத்தே யாகும்
வடுப்பட வைத்திறந்தக் கண்ணும் குடிப்பிறந்தார்
கூறார்தம் வாயின் சிதைந்து. 156

கள்ளார்கள் ளுண்ணுர் கடிவ கடிந்தொ।
எள்ளிப் பிறரை யிகழ்ந்துரையார்—தள்ளியும்
வாயிற்பொய் கூறுர் வடுவறு காட்சியார்
சாயின் பரிவது இலர். 157
பிறர்மறை யின்கண் செவிடாய்த் திறனறிந்து
ஏதிலார் இல்கண் குருடனுய்த் தீய
புறங்கூற்றில் மூங்கையாய் நிற்பானேல் யாதும்
அறம்கூற வேண்டா அவற்கு. 158
பன்னுளும் சென்றக்கால் பண்பிலார் தம்முழை
என்னுனும் வேண்டுப என்றிகழ்ப—என்னுனும்
வேண்டினும் நன்றுமற் றென்று விழுமியோர்
காண்தொறும் செய்வர் சிறப்பு. 159
உடையார் இவரென்று ஒருதலையாப் பற்றிக்
கடையாயார் பின்சென்று வாழ்வர்—உடைய
பிலந்தலைப் பட்டது போலாதே நல்ல
குலந்தலைப் பட்ட இடத்து. 160

## அதிகாரம் 17—பெரியாரைப் பிழையாமை

பொறுப்பரென் றெண்ணிப் புரைதீர்ந்தார் மாட்டும்
வெறுப்பன செய்யாமை வேண்டும்—வெறுத்தபின்
ஆர்க்கும் அருவி அணிமலை நன்னுட
பேர்க்குதல் யார்க்கும் அரிது. 161
பொன்னே கொடுத்தும் புணர்தற் கரியாரைக்
கொன்னே தலைக்கூடப் பெற்றிருந்தும்—அன்னே
பயனில் பொழுதாக் கழிப்பரே நல்ல
நயமில் அறிவி னவர். 162
அவமதிப்பும் ஆன்ற மதிப்பும் இரண்டும்
மிகைமக்க ளால் மதிக்கற் பால—நயம் உணராக்
கையறியா மாக்கள் இழிப்பும் எடுத்தேத்தும்
வையார் வடித்தநூ லார். 163
விரிநிற நாகம் விடருள தேனும்
உருமின் கடுஞ்சினம் சேணின்றும் உட்கும்

அருமை யுடைய அரண்சேர்ந்தும் உய்யார்
பெருமை யுடையார் செறின். 164

எம்மை அறிந்திலிர் எம்போல்வார் இல்லென்று
தம்மைத்தாம் கொள்வது கோளன்று—தம்மை
அரியரா நோக்கி அறன் அறியும் சான்றோர்
பெரியராக் கொள்வது கோள். 165

நளிகடல் தண்சேர்ப்ப நாள்நிழற் போல
விளியும் சிறியவர் கேண்மை—விளிவின்றி
அல்குநிழற் போல் அகன்றகன்று ஓடுமே
தொல்புக ழாளர் தொடர்பு. 166

மன்னர் திருவும் மகளிர் எழில் நலமும்
துன்னியார் துய்ப்பர் தகல்வேண்டா—துன்னிக்
குழைகொண்டு தாழ்ந்த குளிர்மரம் எல்லாம்
உழைதங்கண் சென்றார்க்கு ஒருங்கு. 167

தெரியத் தெரியும் தெரிவிலார் கண்ணும்
பிரியப் பெரும்படர் நோய்செய்யும்—பெரிய
உலவா இருங்கழிச் சேர்ப்பயார் மாட்டும்
கலவாமை கோடியுறும். 168

சுல்லாது போகிய நாளும் பெரியவர்கண்
செல்லாது வைகிய வைகலும்—ஒல்வ
கொடா அது ஒழிந்த பகலும் உரைப்பின்
படாஅவாம் பண்புடையார் கண். 169

பெரியார் பெருமை சிறுதகைமை ஒன்றிற்கு
உரியார் உரிமை அடக்கம்—தெரியுங்கால்
செல்வம் உடையாரும் செல்வரே தன் சேர்ந்தார்
அல்லல் களைப எனின். 170

## அதிகாரம் 18—நல்லினம் சேர்தல்

அறியாப் பருவத்து அடங்காரோடு ஒன்றி
நெறியல்ல செய்தொழுகி யவ்வும்—நெறியறிந்த
நற்சார்வு சாரக் கெடுமே வெயில்முறுகப்
புற்பனிப் பற்றுவிட் டாங்கு. 171

அறிமின் அறநெறி அஞ்சுமின் கூற்றம்
பொறுமின் பிறர் கடுஞ்சொல் போற்றுமின் வஞ்சம்
வெறுமின் வினைதீயார் கேண்மையெஞ் ஞான்றும்
பெறுமின் பெரியார்வாய்ச் சொல். 172

அடைந்தார்ப் பிரிவும் அரும்பிணியும் கேடும்
உடங்குடம்பு கொண்டார்க்கு உறலால்—தொடங்கிப்
பிறப்பின்னாது என்றுணரும் பேரறிவி னாரை
உறப்புணர்க அம்மாஎன் நெஞ்சு. 173

இறப்ப நினையுங்கால் இன்னாது எனினும்
பிறப்பினை யாரும் முனியார்—பிறப்பினுள்
பண்பாற்றும் நெஞ்சத் தவர்களோடு எஞ்ஞான்றும்
நண்பாற்றி நட்கப் பெறின் 174

ஊரங் கணநீர் உரவுநீர்ச் சேர்ந்தக்கால்
பேரும் பிறிதாகித் தீர்த்தமாம்—ஒரும்
குலமாட்சி யில்லாரும் குன்றுபோல் நிற்பர்
நலமாட்சி நல்லாரைச் சார்ந்து. 175

ஒண்கதிர் வாள்மதியம் சேர்தலால் ஓங்கிய
அங்கண் விசும்பின் முயலும் தொழப்படூஉம்
குன்றிய சீர்மையர் ஆயினும் சீர்பெறுவர்
குன்றன்னார் கேண்மை கொளின். 176

பாலோடு அளாயநீர் பாலாகும் அல்லது
நீராய் நிறம் தெரிந்து தோன்றாதாம்—தேரின்
சிறியார் சிறுமையும் தோன்றாதாம் நல்ல
பெரியார் பெருமையைச் சார்ந்து. 177

கொல்லை யிரும்புனத்துக் குற்றி யடைந்தபுல்
ஒல்காவே யாகும் உழவர் உழுபடைக்கு
மெல்லியரே யாயினும் நற்சார்வு சார்ந்தார் மேல்
செல்லாவாம் செற்றார் சினம். 178

நிலநலத்தால் நந்திய நெல்லேபோல் தம்நம்
குலநலத்தால் ஆகுவர் சான்றோர்—கலநலத்தைத்
தீவளி சென்று சிதைத்தாங்குச் சான்றாண்மை
தீயினம் சேரக் கெடும். 179

மனத்தான் மறுவில ரேனும்தாம் சேர்ந்த
இனத்தால் இகழப் படுவர் புனத்து
வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே
எறிபுனம் தீப்பட்டக் கால். 180

## அதிகாரம் 19 —பெருமை

ஈதல் இசையாது இளமைசேண் நீங்குதலால்
காத லவரும் கருத்தல்லர் —காதலித்து
ஆதும் நாம் என்னும் அவாவினைக் கைவிட்டுப்
போவதே போலும் பொருள். 181
இல்சார்வின் ஏமாந்தேம் ஈங்கமைந்தேம் என்றெண்ணிப்
பொச்சாந்து ஒழுகுவர் பேதையார் அச்சார்வு
நின்றன போன்று நிலையா எனவுணர்ந்தார்
என்றும் பரிவது இலர். 182
மறுமைக்கு வித்து மயலின்றிச் செய்து
சிறுமைப் படாதேநீர் வாழ்மின் அறிஞராய்
நின்றுழி நின்றே நிறம்வேறும் காரணம்
இன்றிப் பலவும் உள. 183
உறைப்பருங் காலத்தும் ஊற்றுநீர்க் கேணி
இறைத்துணினும் ஊராற்றும் என்பர்—கொடைக்கடனும்
சாஅயக் கண்ணும் பெரியார்போல் மற்றையார்
ஆஅயக் கண்ணும் அரிது. 184
உறுபுனல் தந்துலகு ஊட்டி அறுமிடத்தும்
கல்லூற் றுழியூறும் ஆறேபோல்—செல்வர்
பலர்க்காற்றிக் கெட்டுலந்தக் கண்ணும் சிலர்க்காற்றிச்
செய்வர் செயற்பா லவை. 185
பெருவரை நாட பெரியார்கண் தீமை
கருநரைமேல் சூடேபோல் தோன்றும்—கருநரையைக்
கொன்றன்ன இன்னா செயினும் சிறியார்மேல்
ஒன்றுனும் தோன்றாக் கெடும். 186
இசைந்த சிறுமை யியல்பிலா தார்கண்
பசைந்த துணையும் பரிவாம்—அசைந்த

நகையேயும் வேண்டாத நல்லறிவி ஞர்கண்
பகையேயும் பாடு பெறும். 187

மெல்லிய நல்லாருள் மென்மை அது இறந்து
ஒன்றுருள் கூற்றுட்கும் உட்குடைமை யெல்லாம்
சலவருள் சாலச் சலமே நலவருள்
நன்மை வரம்பாய் விடல். 188

கடுக்கி யொருவன் கடுங்குறளை பேசி
மயக்கி விடினும் மனப்பிரிப் பொன் றின்றித்
துளக்கம் இலாதவர் தூய மனத்தார்
விளக்கினுள் ஒண்சுடரே போன்று. 189

முன்துற்றும் துற்றினை நாளும் அறம்செய்து
பின்துற்றுத் துற்றுவர் சான்றவர்—அத்துற்று
முக்குற்றம் நீக்கி முடியும் அளவெல்லாம்
துக்கத்துள் நீக்கி விடும். 190

## அதிகாரம் 20—தாளாண்மை

கோளாற்றக் கொள்ளாக் குளத்தின் கீழ்ப் பைங்கூழ்போல்
கேளீவது உண்டு கிளைகளோ துஞ்சுப
வாளாடு கூத்தியர் கண்போல் தடுமாறும்
தாளாளர்க்கு உண்டோ தவறு. 191

ஆடுகோ டாகி அதரிடை நின்றதூஉம்
காழ்கொண்ட கண்ணே களிறணைக்கும் கந்தாகும்
வாழ்தலும் அன்ன தகைத்தே யொருவன்றன்
தாழ்வின்றித் தன்னைச் செயின். 192

உறுபுலி யூனிரை யின்றி யொருநாள்
சிறுதேரை பற்றியும் தின்னும்—அறிவினால்
கால்தொழில் என்று கருதற்க கையினால்
மேல்தொழிலும் ஆங்கே மிகும். 193

இசையாது எனினும் இயற்றியோர் ஆற்றால்
அசையாது நிற்பதாம் ஆண்மை—இசையுங்கால்

கண்டல் திரையலைக்கும் கானலம் தண்சேர்ப்ப
பெண்டிரும் வாழாரோ மற்று. 194

நல்ல குலமென்றும் தீயகுலமென்றும்
சொல்லளவு அல்லால் பொருளில்லை—தொல்சிறப்பின்
ஒண்பொருள் ஒன்றோ தவம்கல்வி ஆள்வினை
என்றிவற்றான் ஆகும் குலம். 195

ஆற்றும் துணையும் அறிவினை உள்ளடக்கி
ஊக்கம் உரையார் உணர்வுடையார் ஊக்கம்
உறுப்பினால் ஆராயும் ஒண்மையுடையார்
குறிப்பின் கீழ்ப்பட்டது உலகு. 196

சிதலை தினப்பட்ட ஆல மரத்தை
மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்குக்
குதலைமை தந்தைகண் தோன்றிற்றான் பெற்ற
புதல்வன் மறைப்பக் கெடும். 197

ஈனமாய் இல்லிருந்து இன்றி விளியினும்
மானம் தலைவருவ செய்பவோ—யானை
வரிமுகம் புண்படுக்கும் வள்ளுகிர் நோன்தாள்
அரிமா மதுகை யவர். 198

தீங்கரும்பு ஈன்ற திரள்கால் உளையலரி
தேங்கமழ் நாற்றம் இழந்தா அங்கு—ஓங்கும்
உயர்குடி யுட்பிறப்பின் என்னும் பெயர்பொறிக்கும்
பேராண்மை யில்லாக் கடை. 199

பெருமுத் தரையர் பெரிதுவந்து ஈயும்
கருனைச்சோறு ஆர்வர் கயவர்—கருனையைப்
பேரும் அறியார் நனி விரும்பு தாளாண்மை
நீரும் அமிழ்தாய் விடும். 200

## 2. நட்பியல்

### அதிகாரம் 21 – சுற்றம் தழால்

வயாவும் வருத்தமும் ஈன்றக்கால் நோவும்
கவா அன் மகன்கண்டு தாய்மறந் தாஅங்கு

அசா அத்தான் உற்ற வருத்தம் உசா அத்தன்
கேளிரைக் காணக் கெடும். 201

அழல்மண்டு போழ்தின் அடைந்தவர்கட்கு எல்லாம்
நிழல்மரம்போல் நேரொப்பத் தாங்கிப்—பழுமரம் போல்
பல்லார் பயன்துய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன். 202

அடுக்கல் மலைநாட தன் சேர்ந் தவரை
எடுக்கலம் என்னார் பெரியோர்—அடுத்தடுத்து
வன்காய் பலபல காய்ப்பினும் இல்லையே
தன்காய் பொறுக்கலாக் கொம்பு. 203

உலகறியத் தீரக் கலப்பினும் நில்லா
சிலபகலாம் சிற்றினத்தார் கேண்மை—நிலைதிரியா
நிற்கும் பெரியோர் நெறியடைய நின்றனைத்தால்
ஒற்கம் இலாளர் தொடர்பு. 204

இன்னர் இனையர் எமர்பிறர் என்னுஞ்சொல்
என்னும் இலராம் இயல்பினால்—துன்னித்
தொலைமக்கள் துன்பம்தீர்ப் பாரேயார் மாட்டும்
தலைமக்கள் ஆகற்பா லார். 205

பொற்கலத்துப் பெய்த புலியுகிர் வான்புழுக்கல்
அக்காரம் பாலோடு அமரார்கைத்து உண்டலின்
உப்பிலிப் புற்கை உயிர் போல் கிளைஞர் மாட்டு
எக்காலத் தானும் இனிது. 206

நாள்வாய்ப் பெறினும்தம் நள்ளாதார் இல்லத்து
வேளாண்மை வெங்கருனை வேம்பாகும்—கேளாய்
அபராணப் போழ்தின் அடகிடுவ ரேனும்
தமராயார் மாட்டே இனிது 207

முட்டிகை போல முனியாது வைகலும்
கொட்டியுண் பாரும் குறடு போல் கைவிடுவர்
சுட்டுக் கோல் போல எரியும் புகுவரே
நட்டார் எனப்படு வார். 208

நறுமலர்த் தண்கோதாய் நட்டார்க்கு நட்டார்
மறுமையும் செய்வதொன் றுண்டோ—இறுமளவும்

எ. அவரோடு
துன்புறுவ துன்புறுக்கால். 209

விருப்பிலார் இல்லத்து வேறிருந்து உண்ணும்
வெருக்குக்கண் வெங்கருனை வேம்பாம்—விருப்புடைத்
தன்போல்வார் இல்லுள் தயங்குநீர்த் தண்புற்கை
என்போடு இயைந்த அமிழ்து. 210

## அதிகாரம் 22—நட்பாராய்தல்

கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மையெஞ் ஞான்றும்
குருத்தின் கரும்புதின் றற்றே—குருத்திற்கு
எதிர்செலத்தின் றன்ன தகைத்தரோ என்றும்
மதுரம் இலாளர் தொடர்பு. 211

இற்பிறப்பு எண்ணி யிடைதிரியார் என்பதோர்
நற்புடை கொண்டமை யல்லது—பொன்கேழ்
புனலொழுகப் புள்ளிரியும் பூங்குன்ற நாட
மனமறியப் பட்டதொன்று அன்று. 212

யானை அனையவர் நண்பொரீஇ நாயனையார்
கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும்—யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் எறிந்தவேல்
மெய்யதா வால்குழைக்கும் நாய். 213

பலநாளும் பக்கத்தார் ஆயினும் நெஞ்சில்
சிலநாளும் ஒட்டாரோடு ஒட்டார்—பலநாளும்
நீத்தார் எனக்கை விடலுண்டோ தம்நெஞ்சத்து
யாத்தாரோடு யாத்த தொடர்பு. 214

கோட்டுப்பூப் போல மலர்ந்துபின் கூம்பாது
வேட்டதே வேட்டதாம் நட்பாட்சி—தோட்ட
கயப்பூப்போல் முன்மலர்ந்து பின்கூம்பு வாரை
நயப்பாரும் நட்பாரும் இல். 215

கடையாயார் நட்பில் கமுகனையர் ஏனை
இடையாயார் தெங்கின் அனையர்—தலையாயார்
எண்ணரும் பெண்ணை போன்று இட்டஞான்று இட்டதே
தன்மை யுடையார் தொடர்பு. 216

கழுநீருள் காரட கேனும் ஒருவன்
விழுமிதாக் கொள்ளின் அமிழ்தாம்—விழுமிய
குய்த்துவையார் வெண்சோறே யாயினும் மேவாதார்
கைத்துண் டல் காஞ்சிரங் காய். 217

நாய்க்கால் சிறுவிரல்போல் நன்கணியர் ஆயினும்
ஈக்கால் துணையும் உதவாதார் தட்பென்னும்
சேய்த்தானும் சென்று கொளல்வேண்டும் செய்வினைக்கும்
வாய்க்கால் அனையார் தொடர்பு. 218

தெளிவிலார் நட்பின் பகைநன்று சாதல்
விளியா வருநோயின் நன்றால்—அளிய
இகழ்தலின் கோறல் இனிதேமற்று இல்ல
புகழ்தலின் வைதலே நன்று. 219

ம ப் பலரோடு பன்னாள் முயங்கிப்
பொரீஇப் பொருள்தக்கார்க் கோடலே வேண்டும்
பரீஇ உயர்செகுக்கும் பாம்பொடும்
மரீஇப் பின்னைப் பிரிவு. 220

## அதிகாரம் 23—நட்பில் பிழை பொறுத்தல்

நல்லார் எனத்தாம் நனிவிரும்பிக் கொண்டாரை
அல்லார் எனினும் அடக்கிக் கொளல்வேண்டும்
நெல்லுக்கு உமியுண்டு நீர்க்கு நுரையுண்டு
புல்லிதழ் பூவிற்கும் உண்டு. 221

செறுத்தோறு உடைப்பினும் செம்புனலோடு ஊடார்
மறுத்தும் சிறைசெய்வர் நீர்நசை வாழ்நர்
வெறுப்ப வெறுப்பச் செயினும் பொறுப்பரே
தாம்வேண்டிக் கொண்டார் தொடர்பு. 222

இறப்பவே தீய செயினும்தன் நட்டார்
பொறுத்தல் தருவதொன் றன்றோ—நிறக்கோங்கு
உருவ வண்டார்க்கும் உயர்வரை நாட
ஒருவர்பொறை இருவர் நட்பு. 223

மடிதிரை தந்திட்ட வான்கதிர் முத்தம்
கடுவிசை நாவாய் கரையலைக்கும் சேர்ப்ப
விடுதற்கு அரியார் இயல்பிலரேல் நெஞ்சம்
சுடுதற்கு மூட்டிய தீ. 224
இன்னா செயினும் விடற்பாலர் அல்லாரைப்
பொன்னாகப் போற்றிக் கொளல்வேண்டும்—பொன்னொடு
நல்லில் சிதைத்ததீ நாள்தொறும் நாடித்தம்
இல்லத்தில் ஆக்குத லால். 225
இன்னாத செயினும் விடுதற்கு அரியாரைத்
துன்னாத் துறத்தல் தகுவதோ—துன்னருஞ்சீர்
விண்குத்து நீள்வரை வெற்ப களைபவோ
கண்குத்திற் றென்றுதம் கை. 226
இலங்குநீர்த் தண்சேர்ப்ப இன்னா செயினும்
கலந்து பழிகாணார் சான்றோர்—கலந்தபின்
தீமையெடுத்துரைக்கும் திண்ணறிவு இல்லாதார்
தாமும் அவரின் கடை. 227
ஏதிலார் செய்தது இறப்பவே தீதெனினும்
நோதக்கது என்னுண்டாம் நோக்குங்கால்—காதல்
கழுமியார் செய்த கறங்கருவி நாட
விழுமிதாம் நெஞ்சத்துள் நின்று. 228
தமரென்று தாம்கொள்ளப் பட்டவர் தம்மைத்
தமரன்மை தாமறிந்தார் ஆயின் அவரைத்
தமரினும் நன்கு மதித்துத் தமரன்மை
தம்முள் அடக்கிக் கொளல். 229
குற்றமும் ஏனைக் குணமும் ஒருவனை
நட்டபின் நாடித் திரிவேனேல்—நட்டான்
மறைகாவா விட்டவன் செல்வுழிச் செல்க
அறைகடல்சூழ் வையம் நக. 230

## அதிகாரம் 24—கூடாநட்பு

செறிப்பில் பழங்கூரைச் சேறணை யாக
இறைத்துநீர் ஏற்றும் கிடப்பர்— கறைக் குன்றம்

பொங்கருவி தாழும் புனல்வரை நன்னாட
தங்கருமம் முற்றும் துணை. 231
சீரியார் கேண்மை சிறந்த சிறப்பிற்றாய்
மாரிபோல் மாண்ட பயத்ததாம்—மாரி
வறந்தக்கால் போலுமே வாலருவி நாட
சிறந்தக்கால் சீரிலார் நட்பு. 232
நுண்ணுணர்வி னாரொடு கூடி நுகர்வுடைமை
விண்ணுலகே யொக்கும் விழைவிற்றால்—நுண்ணூல்
உணர்விலர் ஆகிய ஊதியம் இல்லார்ப்
புணர்தல் நிரயத்துள் ஒன்று. 233
பெருகுவது போலத் தோன்றிவைத் தீப்போல்
ஒருபொழுதும் சொல்லாதே நந்தும்—அருகெல்லாம்
சந்தன நீள்சோலைச் சாரல் மலைநாட
பந்தம் இலாளர் தொடர்பு. 234
செய்யாத செய்தும்நாம் என்றலும் செய்வதனைச்
செய்யாது தாழ்த்துக் கொண்டு ஓட்டலும்—மெய்யாக
இன்புறூஉம் பெற்றி யிகழ்ந்தார்க்கும் அந்நிலையே
துன்புறூஉம் பெற்றி தரும். 235
ஒருநீர்ப் பிறந்தொருங்கு நீண்டக் கடைத்தும்
விரிநீர்க் குவளையை யாம்பல் ஒக்கல்லா
பெருநீரார் கேண்மை கொளினும்நீர் அல்லார்
கருமங்கள் வேறு படும். 236
முற்றல் சிறுமந்தி முற்பட்ட தந்தையை
நெற்றுக்கண் டன்ன விரலான் ஞெமிர்த்திட்டுக்
குற்றிப் பறிக்கும் மலைநாட இன்னாதே.
ஒற்றுமை கொள்ளாதார் நட்பு. 237
முட்டுற்ற போழ்தின் முடுகியென் ஆருயிரை
நட்டான் ஒருவன்கை நீட்டேனேல்—நட்டான்
கடிமனை கட்டழித்தான் செலவுழிச் செல்க
நெடுமொழி வையம் நக. 238
ஆன்படு நெய்பெய் கலனுள் அதுகளைந்து
வேம்படு நெய்பெய் தனைத்தரோ—தேம்படு

நல்வரை நாட நயமுணர்வார் நண்பொ।  ]ப
புல்லறிவி ஞரோடு நட்பு 239
உருவிற்கு அமைந்தான்கண் ஊராண்மை யின்மை
பருகற்கு அமைந்தபால் நீரளாய் அற்றே
தெரிவுடையார் தீயினத்தார் ஆகுதல் நாகம்
விரிபெடையோடு ஆடிவிட் டற்று. 240

# 3. இன்ப இயல்

## அதிகாரம் 25 – அறிவுடைமை

பகைவர் பணிவிடம் நோக்கித் தகவுடையார்
தாமேயும் நாணித் தலைச் செல்லார் காணுய்
இளம்பிறை ஆயக்கால் திங்களைச் சேராது
அணங்கரும் துப்பின் அரா. 241
நளிகடல் தண்சேர்ப்ப நல்கூர்ந்த மக்கட்கு
அணிகலம் ஆவது அடக்கம்—பணிவில்சீர்
மாத்திரையின்றி நடக்குமேல் வாழுமூர்
கோத்திரம் கூறப் படும். 242
நிலத்து வித்திடினும் காஞ்சிரங்காழ் தெங்காகா
தென்னுட் டவரும் சுவர்க்கம் புகுதலால்
தன்னுல்தான் ஆகும் மறுமை வடதிசையும்
கொன்னுளர் சாலப் பலர். 243
வம்பின் இலையுள் கனியினும் வாழைதன்
ஞ்சுவை யாதும் திரியாதாம்—ஆங்கே
னம்தீது எனினும் இயல்புடையார் கேண்மை
னம்தீதாம் பக்கம் அரிது. 244
டல்சார்ந்தும் இன்னீர் பிறக்கும் மலைசார்ந்தும்
ப்பீண்டு உவரி பிறத்தலால் தத்தம்
னத்தனையர் அல்லர் எறிகடல்தண் சேர்ப்ப
னத்தனையர் மக்களென் பார். 245
ரா அரைப் புன்னைப் படுகடல்தன் சேர்ப்ப
ரா அலும் ஒட்டலும் செய்பவோ நல்ல

மருஉச்செய்து யார்மாட்டும் தங்கும் மனத்தார்
விராஅஅய்ச் செய்யாமை நன்று. 246
உணர வுணரும் உணர்வுடை யாரைப்
புணரப் புணருமாம் இன்பம்—புணரின்
தெரியத் தெரியும் தெரிவிலா தாரைப்
பிரியப் பிரியுமாம் நோய். 247
நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும்—நிலையினும்
மேன்மேல் உயர்த்து நிறுப்பானும் தன்னைத்
தலையாகச் செய்வானும் தான். 248
கரும வரிசையால் கல்லாதார் பின்னும்
பெருமை யுடையாரும் சேறல்—அருமரபின்
ஓதம் அரற்றும் ஒலிகடல் தண்சேர்ப்ப
பேதைமை யன்றது அறிவு. 249
கருமமும் உள்படாப் போகமும் துவ்வாத்
தருமமும் தக்கார்க்கே செய்யா—ஒருநிலையே
முட்டின்றி மூன்றும் முடியுமேல் அஃதென்ப
பட்டினம் பெற்ற கலம். 250

## அதிகாரம் 26 — அறிவின்மை

நுண்ணுணர் வின்மை வறுமை அஃதுடைமை
பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம்—எண்ணுங்கால்
பெண்ணவாய் ஆணிழந்த பேடி அணியாளோ
கண்ணவாத் தக்க கலம். 251
பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் பாடழிந்து
அல்லல் உழப்பது அறிதிரேல்—தொல்சிறப்பின்
நாவின் கிழத்தி யுறைதலால் சேராளே
பூவின் கிழத்தி புலந்து. 25[illegible]
கல்லென்று தந்தை கழற அதனையோர்
சொல்லென்று கொள்ளாது இகழ்ந்தவன்—மெல்ல
எழுத்தோலை பல்லார்முன் நீட்ட விளியா
வழுக்கோலைக் கொண்டு விடும். 25[illegible]

கல்லாது நீண்ட ஒருவன் உலகத்து
நல்லறி வாளர் இடைப்புக்கு—மெல்ல
இருப்பினும் நாயிருந் தற்றே இராஅது
உரைப்பினும் நாய்குரைத் தற்று. 254
புல்லாப்புன் கோட்டிப் புலவர் இடைப்புக்குக்
கல்லாத சொல்லும் கடையெல்லாம் கற்ற
கடாஅயினும் சான்றவர் சொல்லார் பொருள்மேல்
படாஅ விடுபாக்கு அறிந்து. 255
கற்றறிந்த நாவினர் சொல்லார்தம் சோர்வஞ்சி
மற்றைய ராவார் பகர்வர் பனையின்மேல்
வற்றிய வோலை கலகலக்கும் எஞ்ஞான்றும்
பச்சோலைக் கில்லை யொலி. 256
பன்றிக்கூழ்ப் பத்தரில் தேமா வடித்தற்றால்
நன்றறியா மாந்தர்க்கு அறத்தாறு உரைக்குங்கால்
குன்றின்மேல் கொட்டும் தறிபோல் தலைதகர்ந்து
சென்றிசையா ஆகும் செவிக்கு. 257
பாலால் கழீஇப் பல நாள் உணக்கினும்
வாலிதாம் பக்கம் இருந்தைக்கு இருந்தன்று
கோலால் கடாஅய்க் குறினும் புகல்ஒல்லா
நோலா வுடம்பிற்கு அறிவு. 258
பொழிந்தினிது நாறினும் பூமிசைதல் செல்லாது
இழிந்தவை காமுறூஉம் ஈப்போல்—இழிந்தவை
தாம்கலந்த நெஞ்சினர்க்கு என்னுகும் தக்கார்வாய்த்
தேன்கலந்த தேற்றச்சொல் தேர்வு. 259
கற்றூர் உரைக்கும் கசடறு நுண்கேள்வி
பற்றுது தன்னெஞ்சு உதைத்தலால்—மற்றுமோர்
தன்போல் ஒருவன் முகம்நோக்கித் தானுமோர்
புன்கோட்டி கொள்ளுமாம் கீழ். 260

## அதிகாரம் 27—நன்றியில் செல்வம்

அருகலது ஆகிப் பலபழுத்தக் கண்ணும்
பொரிதாள் விளவினை வாவல் குறுகா

பெரிதணியர் ஆயினும் பீடிலார் செல்வம்
கருதும் கடப்பாட்டது அன்று. 261

அள்ளிக்கொள் வன்ன குறுமுகிழ ஆயினும்
கள்ளிமேல் கைந்நீட்டார் சூடும்பூ அன்மையால்
செல்வம் பெரிதுடையர் ஆயினும் கீழ்களை
நல்லார் அறிவுடை யார். 262

மல்கு திரைய கடற்கோட் டிருப்பினும்
வல்லூற்று உவரில் கிணற்றின்கண் சென்றுண்பர்
செல்வம் பெரிதுடையர் ஆயினும் சேண்சென்றும்
நல்குவார் கட்டே நசை. 263

புணர்கடல்சூழ் வையத்துப் புண்ணியமோ வேறே
உணர்வது உடையார் இருப்ப—உணர்விலா
வட்டும் வழுதுணையும் போல்வாரும் வாழ்வரே
பட்டும் துகிலும் உடுத்து. 264

நல்லார் நயவர் இருப்ப நயமிலாக்
கல்லார்க்கொன் றாகிய காரணம்—தொல்லை
வினைப்பயன் அல்லது வேல்நெடுங் கண்ணாய்
நினைப்ப வருவதொன் றில். 265

நாறாத் தகடேபோல் நன்மலர்மேல் பொற்பாவாய்
நீறாய் நிலத்து விளியரோ—வேறாய
புன்மக்கள் பக்கம் புகுவாய் நீ பொன்போலும்
நன்மக்கள் பக்கம் துறந்து. 266

நயவார்கண் நல்குரவு நாணின்று கொல்லோ
பயவார்கண் செல்வம் பரம்பப்—பயின்கொல்
வியவார்காண் வேற்கண்ணாய் இவ்விரண்டும் ஆங்கே
நயவாது நிற்கும் நிலை. 267

வலவைகள் அல்லாதார் காலாறு சென்று
கலவைகள் உண்டு கழிப்பர்—வலவைகள்
காலாறும் செல்லார் கருனையால் துய்ப்பவே
மேலாறு பாய இருந்து. 268

பொன்னிறச் செந்நெல் பொதியொடு பீள்வாட
மின்னொளிர் வானம் கடலுள்ளும் கான்றுகுக்கும்

வெண்மை யுடையார் விழுச்செல்வம் எய்தியக்கால்
வண்மையும் அன்ன தகைத்து. 269
ஓதியும் ஓதார் உணர்விலார் ஓதாதும்
ஓதி யனையார் உணர்வுடையார்—தூய்தாக
நல்கூர்ந்தும் செல்வர் இரவாதார் செல்வரும்
நல்கூர்ந்தார் ஈயார் எனின். 270

# 4. துன்ப இயல்

## அதிகாரம் 28—ஈயாமை

நட்டார்க்கும் நல்லாதவர்க்கும் உளவரையால்
அட்டது பாத்துண்டல் அட்டுண்டல்—அட்டது
அடைத்திருந்து உண்டொழுகும் ஆவதில் மாக்கட்கு
அடைக்குமாம் ஆண்டைக் கதவு. 271
எத்துணை யானும் இயைந்த அளவினால்
சிற்றறம் செய்தார் தலைப்படுவர்—மற்றைப்
பெருஞ்செல்வம் எய்தியக்கால் பின்னறிதும் என்பார்
அழிந்தார் பழிகடலத் துள். 272
துய்த்துக் கழியான் துறவோர்க்கொன்று ஈகலான்
வைத்துக் கழியும் மடவோனை—வைத்த
பொருளும் அவனை நகுமே உலகத்து
அருளும் அவனை நகும். 273
கொடுத்தலும் துய்த்தலும் தேற்றா இடுக்குடை
உள்ளத்தான் பெற்ற பெருஞ்செல்வம்இல்லத்து
உருவுடைக் கன்னியரைப் போலப் பருவத்தால்
ஏதிலான் துய்க்கப் படும். 274
எறிநீர்ப் பெருங்கடல் எய்தி யிருந்தும்
அறுநீர்ச் சிறுகிணற்று ஊறல் பார்த்து உண்பர்
மறுமை அறியாதார் ஆக்கத்தில் சான்றோர்
கழிநல் குரவே தலை. 275
எனதெனது என்றிருக்கும் ஏழை பொருளை
எனதெனது என்றிருப்பன் யானும்—தனதாயின்

தானும் அதனை வழங்கான் பயன்றுய்வான்
யானும் அதனை அது. 276

வழங்காத செல்வரின் நல்கூர்ந்தார் உய்ந்தார்
இழந்தார் எனப்படுதல் உய்ந்தார்—உழந்ததனைக்
காப்புய்ந்தார் கல்லுதலும் உய்ந்தார்தம் கைந்நோவ
யாப்புய்ந்தார் உய்ந்த பல. 277

தனதாகத் தான்கொடான் தாயத் தவரும்
தமதாய போழ்தே கொடாஅர்—தனதாக
முன்னே கொடுப்பின் அவர்கடியார் தான்கடியான்
பின்னைஅவர் கொடுக்கும் போழ்து. 278

இரவலர் கன்றாக ஈவார்ஆ வாக
விரகின் சுரப்பதாம் வண்மை—விரகின்றி
வல்லவர் ஊன்ற வடியாபோல் வாய்வைத்துக்
கொல்லச் சுரப்பதாம் கீழ். 279

ஈட்டலும் துன்பம்மற்று ஈட்டிய வொண்பொருளைக்
காத்தலும் ஆங்கே கடுந்துன்பம்—காத்தல்
குறைபடில் துன்பம் கெடில்துன்பம் துன்பக்கு
உறைபதி மற்றைப் பொருள். 280

## அதிகாரம் 29— இன்மை

அத்திட்ட கூறை அரைச்சுற்றி வாழினும்
பத்தெட்டு உடைமை பலருள்ளும் பாடெய்தும்
ஒத்த குடிபிறந்த கண்ணுமொன்று இல்லாதார்
செத்த பிணத்தின் கடை. 281

நீரினும் நுண்ணிது நெய்யென்பர் நெய்யினும்
யாரும் அறிவர் புகைநுட்பம்—தேரின்
நிரப்பிடும்பை யாளன் புகுமே புகையும்
புகற்கரிய பூழை நுழைந்து. 282

கல்லோங்கு உயர்வரைமேல் காந்தள் மலராக்கால்
செல்லாவாம் செம்பொறி வண்டினம்—கொல்லைக்
கலாஅல் கிளிகடியும் கானக நாட
இலாஅ அர்க்கு இல்லை தமர். 283

உண்டாய போழ்தின் உடைந்துழிக் காகம்போல்
தொண்டா யிரவர் தொகுபவே—வண்டாய்த்
திரிதரும் காலத்துத் தீதிலிரோ என்பார்
ஒருவரும் இவ்வுலகத்து இல். 284
பிறந்த குலமாயும் பேராண்மை மாயும்
சிறந்ததம் கல்வியும் மாயும்— கறங்கருவி
கல்மேல் கழூஉம் கணமலை நன்னாட
இன்மை தழுவப்பட் டார்க்கு. 285
உள்கூர் பசியால் உழைநசைஇச் சென்றார்கட்கு
உள்ளூர் இருந்துமொன்று ஆற்றாதான்—உள்ளூர்
இருந்துயிர் கொன்னே கழியாது தான்போய்
விருந்தினன் ஆதலே நன்று. 286
நீர்மையே யன்றி நிரம்ப எழுந்ததம்
கூர்மையும் எல்லாம் ஒருங்கிழப்பர்—கூர்மையின்
முல்லை அலைக்கும் எயிற்றாய் நிரப்பென்னும்
அல்லல் அடையப்பட் டார் 287
இட்டாற்றுப் பட்டொன்று இரந்தவர்க்கு ஆற்றாது
முட்டாற்றுப் பட்டு முயன்றுள்ளூர் வா
நெட்டாற்றுச் சென்று நிரைமனையில் கை
கெட்டாற்று வாழ்க்கையே நன்று. 288
கடகம் செறிந்ததம் கைகளால் வாங்கி
அடகு பறித்துக்கொண்டு அட்டுக்—குடைகலனா
உப்பிலி வெந்தை தின்று உள்ளற்று வாழ்பவே
துப்புரவு சென்றுலந்தக் கால். 289
ஆர்த்த பொறிய அணிகிளர் வண்டினம்
பூத்தொழி கொம்பின் மேல் செல்லாவாம்—நீர்த்தருவி
தாழா வுயர்சிறப்பின் தண்குன்ற நன்னாட
வாழாதார்க்கு இல்லை தமர். 290

## அதிகாரம் 30—மானம்

திருமதுகை யாகத் திறனிலார் செய்யும்
பெருமிதம் கண்டக் கடைத்தும்—எரிமடிண்க்

கானம் தலைப்பட்ட தீப்போல் கனலுமே
மானம் உடையார் மனம். 291

என்பாய் உகினும் இயல்பிலார் பின்சென்று
தம்பாடு உரைப்பரோ தம்முடையார்—தம்பாடு
உரையாமை முன்னுணரும் ஒண்மை யுடையார்க்கு
உரையாரோ தாமுற்ற நோய். 292

யாமாயின் எம்மில்லம் காட்டும் தாமாயின்
காணவே கற்பழியும் என்பார்போல்—நாணிப்
புறக்கடை வைத்தீவர் சோறும் அதனால்
மறந்திடுக செல்வர் தொடர்பு. 293

இம்மையும் நன்றாம் இயல்நெறியும் கைவிடாது
உம்மையும் நல்ல பயத்தலால்—செம்மையின்
நானம் கமழும் கதுப்பினாய் நன்றேகாண்
மானம் உடையார் மதிப்பு. 294

பாவமும் ஏனைப் பழியும் படவருவ
சாயினும் சான்றவர் செய்கலார் சாதல்
ஒருநாள் ஒருபொழுதைத் துன்பம் அவைபோல்
அருநவை ஆற்றுதல் இன்று. 295

மல்லல்மா ஞாலத்து வாழ்ப வருள் எல்லாம்
செல்வர் எனினும் கொடாதவர்—நல்கூர்ந்தார்
நல்கூர்ந்தக் கண்ணும் பெருமுத் தரையரே
செல்வரைச் சென்றிரவா தார். 296

கடையெலாம் காய்பசி யஞ்சுமற்று ஏனை
இடையெலாம் இன்னாமை அஞ்சும்—புடைபரந்த
விற்புருவ வேல்நெடுங் கண்ணாய் தலையெலாம்
சொற்பழி அஞ்சி விடும். 297

நல்லர் பெரிதளியர் நல்கூர்ந்தார் என்றெள்ளிச்
செல்வர் சிறுநோக்கு நோக்குங்கால்—கொல்லன்
உலையூதும் தீயேபோல் உள்கனலும் கொல்லோ
தலையாய சான்றோர் மனம். 298

நச்சியார்க்கு ஈயாமை நாணன்று நாள்நாளும்
அச்சத்தால் நாணுதல்நாணன்றாம்—எச்சத்தின்

மெல்லிய ராகித்தம் மேலாயார் செய்தது
செல்லா திருப்பது நாண். 299
கடமா தொலைச்சிய கானுறை வேங்கை
இடம்வீழ்ந்தது உண்ணுது இறக்கும்—இடமுடைய
வானகம் கையுறினும் வேண்டார் விழுமியோர்
மானம் அழுங்க வரின். 300

## காரம் 31—இரவச்சம்

நம்மாலே ஆவர் இந் நல்கூர்ந்தார் எஞ்ஞான்றும்
தம்மாலாம் ஆக்கம் இலரென்று—தம்மை
மருண்ட மனத்தார்பின் செல்பவோ தாமும்
தெருண்ட அறிவி னவர். 301
இழித்தக்க செய்தொருவன் ஆரவுணலின்
பழித்தக்க செய்யான் பசித்தல் தவறுே
விழித்திமைக்கும் மாத்திரை யன்றுே வொருவன்
அழித்துப் பிறக்கும் பிறப்பு. 302
இல்லாமை கந்தா இரவு துணிந்தொருவர்
செல்லாரும் அல்லர் சிறுநெறி—புல்லா
அகம்புகுமின் உண்ணுமின் என்பவர்மாட் டல்லால்
முகம்புகுதல் ஆற்றுமோ மேல். 303
திருத்தன்னை நீப்பினும் தெய்வம் செறினும்
உருத்த மனத்தோடு உயர்வுள்ளின் அல்லால்
அருத்தம் செறிக்கும் அறிவிலார் பின்சென்று
எருத்திறைஞ்சி நில்லதாம் மேல். 304
கரவாத திண்அன்பின் கண்ணன்னுர் கண்ணும்
இரவாது வாழ்வதாம் வாழ்க்கை—இரவினை
உள்ளுங்கால் உள்ளம் உருகுமால் என்கொலோ
கொள்ளுங்கால் கொள்ளுவார் குறிப்பு. 305
இன்னு இயைக இனிய வொழிகென்று
தன்னையே தானிரப்பத் தீர்வதற்கு—என்னைகொல்
காதல் கவற்றும் மனத்தினல் கண்பாழ்பட்டு
ஏதி லவரை இரவு. 306

என்றும் புதியார் பிறப்பினும் இவ்வுலகத்து
என்றும் அவனே பிறக்கலான்—குன்றின்
பரப்பெலாம் பொன்னொழுகும் பாயருவி நாட
இரப்பாரை யெள்ளா மகன். 307

புறத்துத்தன் இன்மை நலிய அகத்துத் தன்
நன்ஞானம் நீக்கி நிறீஇ யொருவனை
ஈயாய் எனக்கென்று இரப்பானேல் அந்நிலையே
மாயானோ மாற்றி விடின். 308

ஒருவர் ஒருவரைச் சார்ந்தொழுகல் ஆற்றி
வழிபடுதல் வல்லுதல் அல்லால்—பரிசழிந்து
செய்யீரோ என்னும் என்னும் சொற்கு இன்
பையத்தான் செல்லும் நெறி. 309

பழமைகந் தாகப் பசைந்த வழியே
கிழமைதான் யாதானும் செய்க—கிழமை
பொறாஅர் அவரென்னின் பொத்தித்தம் நெஞ்சத்து
அறாஅச் சுடுவதோர் தீ. 310

# 5. பொது இயல்

## அதிகாரம் 32 – அவையறிதல்

மெய்ஞ்ஞானக் கோட்டி யுறழ்வழி விட்டாங்கோர்
அஞ்ஞானம் தந்திட்டு அதுவாங்கு அறத்துழாய்க்
கைஞ்ஞானம் கொண்டொழுகும் காரறி வாளர்முன்
சொல்ஞானம் சோர விடல். 311

நாப்பாடம் சொல்லி நலமுணர்வார் போல்செறிக்கும்
தீப்புலவற் சேரார் செறிவுடையார்—தீப்புலவன்
கோட்டியுள் குன்றக் குடிபழிக்கும் அல்லாக் கால்
தோள்புடைக் கொள்ளா எழும். 312

சொல்தாற்றுக் கொண்டு சுனைத்தெழுதல் காமுறுவர்
கற்றாற்றள் வன்மையும் தாம் தேறார்—கற்ற
செலவுரைக்கும் ஆறறியார் தோற்பது அறியார்
பலவுரைக்கும் மாந்தர் பலர். 313

கற்றதூஉம் இன்றிக் கணக்காயர் பாடத்தால்
பெற்றதாம் பேதையோர் சூத்திரம்—மற்றதனை
நல்லார் இடைப்புக்கு நாணாது சொல்லித்தன்
புல்லறிவு காட்டி விடும். 314

வென்றிப் பொருட்டால் விலங்கொத்து மெய்கொள்ளார்
கன்றிக் கறுத்தெழுந்து காய்வாரோடு—ஒன்றி
உரைவித் தகம்எழுவார் காண்பவே கையுள்
சுரைவித்துப் போலும்தம் பல். 315

பாடமே யோதிப் பயன்தெரிதல் தேற்றாத
மூடர் முனிதக்க சொல்லுங்கால்—கேடரும்சீர்ச்
சான்றோர் சமழ்த்தனர் நிற்பவே மற்றவரை
ஈன்றாட்கு இறப்பப் பரிந்து. 316

பெறுவது கொள்பவர் தோள்போல் நெறிபட்டுக்
கற்பவர்க் கெல்லாம் எளிய நூல்—மற்றம்
முறிபுரை மேனியர் உள்ளம்போன்று யார்க்கும்
அறிதற் கரிய பொருள். 317

புத்தகமே சாலத் தொகுத்தும் பொருள்தெரியார்
உய்த்தகம் எல்லாம் நிறைப்பினும்—மற்றவற்றைப்
போற்றும் புலவரும் வேறே பொருள்தெரிந்து
தேற்றும் புலவரும் வேறு. 318

பொழிப்பகலம் நுட்பம்நூல் எச்சம்இந் நான்கின்
கொழித்தகலம் காட்டாதார் சொற்கள் பழிப்பில்
நிரை யாமா சேர்க்கும் நெடுங்குன்ற நாட
உரையாமோ நூலிற்கு நன்கு. 319

இற்பிறப்பு இல்லார் எனைத்துநூல் கற்பினும்
சொல்பிறரைக் காக்கும் கருவியரோ—இற்பிறந்த
நல்லறிவாளர் நவின்றநூல் தேற்றாதார்
புல்லறிவு தாமறிவது இல். 320

# 6. பகையியல்

## அதிகாரம் 33—புல்லறிவாண்மை

அருளின் அறமுரைக்கும் அன்புடையார் வாய்ச்சொல்
பொருளாகக் கொள்வர் புலவர்—பொருளல்லா
ஏழை யதனை யிகழ்ந்துரைக்கும் பாற்கூழை
மூழை சுவையுணரா தாங்கு. 321

அவ்வியம் இல்லார் அறத்தாறு உரைக்குங்கால்
செவ்வியர் அல்லார் செவிகொடுத்தும் கேட்கலார்
கவ்வித்தோல் தின்னும் குணுங்கர்நாய் பாற்சோற்றின்
செவ்வி கொளல்தேற் றாதாங்கு. 322

இமைக்கும் அளவில்தம் இன்னுயிர்போம் மார்க்கம்
எனைத்தானும் தாம்கண் டிருந்தும்—நினைத்துணையும்
நன்றி புரிகல்லா நாண்இல் மடமாக்கள்
பொன்றிலென் பொன்றாக்கால் என். 323

உளநாள் சிலவால் உயிர்க்கேமம் இன்றால்
பலர்மன்னும் தூற்றும் பழியால்—பலருள்ளும்
கண்டாரோடு எல்லாம் நகாஅது எவனொருவன்
தண்டித் தனிப்பகை கோள். 324

எய்தி யிருந்த அவைமுன்னர்ச் சென்றெள்ளி
வைதான் ஒருவன் ஒருவனை—வைய
வயப்பட்டான் வாளா இருப்பானேல் வைதான்
வியத்தக்கான் வாழும் எனின். 325

மூப்புமேல் வாராமை முன்னே அறவினையை
ஊக்கி அதன்கண் முயலாதான்—நூக்கிப்
புறத்திரு போகென்னும் இன்னாச்சொல் இல்லுள்
தொழுத்தையால் கூறப் படும். 326

தாமேயும் இன்புறார் தக்கார்க்கு நன்றாற்றார்
ஏமம்சார் நன்னெறியும் சேர்கலார்—தாம்மயங்கி
ஆக்கத்துள் தூங்கி அவத்தமே வாழ்நாளைப்
போக்குவார் புல்லறிவி னார். 327

சிறுகாலை யேதமக்குச் செல்வுழி வல்சி
இறுகிறுகத் தோட்கோப்புக் கொள்ளார் — இறுகிறுகிப்
பின்னறிவாம் என்றிருக்கும் பேதையார் கைகாட்டும்
பொன்னும் புளிவிளங்காய் ஆம். 328
வெறுமை யிடத்தும் விழுப்பிணிப் போழ்தும்
மறுமை மனத்தாரே யாகி — மறுமையை
ஐந்தை அனைத்தானும் ஆற்றிய காலத்துச்
சிந்தியார் சிற்றறிவி னார். 329
என்னேமற்று இவ்வுடம்பு பெற்றும் அறம்நினையார்
கொன்னே கழிப்பர்தம் வாழ்நாளை — அன்னோ
அளவிறந்த காதல்தம் ஆருயிர் அன்னார்க்
கொளஇழைக்கும் கூற்றமும் கண்டு. 330

## அதிகாரம் 34 — பேதைமை

கொலைஞர் உலையேற்றித் தீமடுப்ப ஆமை
நிலையறியாது அந்நீர் படிந்தாடி யற்றே
கொலைவல் பெருங்கூற்றம் கோல் பார்ப்ப ஈண்டை
வலையகத்துச் செம்மாப்பார் மாண்பு. 331
பெருங்கடல் ஆடிய சென்றார் ஒருங்குடன்
ஓசை யவிந்தபின் ஆடுதும் என்றற்றால்
இல்செய் குறைவினை நீக்கி அறவினை
மற்றறிவாம் என்றிருப்பார் மாண்பு. 332
குலம்தவம் கல்வி குடிமைமூப்பு ஐந்தும்
விலங்காமல் எய்தியக் கண்ணும் — நலம்சான்ற
மையறு தொல்சீர் உலகம் அறியாமை
நெய்யிலாப் பாற்சோற்றின் நேர். 333
கல்நனி நல்ல கடையாய மாக்களின்
சொல்நனி தாமுணரா ஆயினும் — இன்னினியே
நிற்றல் இருத்தல் கிடைத்தல் இயங்குதல்என்று
உற்றவர்க்குத் தாம்உதவ லான். 334
பெறுவதொன்று இன்றியும் பெற்றானே போலக்
கறுவுகொண்டு ஏலாதார் மாட்டும் — கறுவினால்

கோத்தின்ஞு கூறி உரையாக்கால் பேதைக்கு
நாத்தின்னும் நல்ல சுனைத்து. 335

தம்கண் மரபில்லார் பின்சென்று தாம்அவரை
எம்கண் வணக்குதும் என்பவர்—புன்கேண்மை
நற்றளிர்ப் புன்னை மலரும் கடற்சேர்ப்ப
கல்கிள்ளிக் கையிழந் தற்று. 336

ஆகாது எனினும் அகத்துநெய் உண்டாகின்
போகாது எறும்பு புறஞ்சுற்றும்—யாதும்
கொடாஅர் எனினும் உடையாரைப் பற்றி
விடாஅர் உலகத் தவர். 337

நல்லவை நாள்தொறும் எய்தார் அறம்செய்யார்
இல்லாதார்க்கு யாதொன்றும் ஈகலார்—எல்லாம்
இனியார்தோள் சேரார் இசைபட வாழார்
முனியார்கொல் தாம்வாழும் நாள். 338

விழைந்தொருவர் தம்மை வியப்ப ஒருவர்
விழைந்திலேம் என்றிருக்கும் கேண்மை—தழுங்குரல்
பாய்திரைசூழ் வையம் பயப்பினும், இன்ஞதே
ஆய்நலம் இல்லாதார் மாட்டு. 339

கற்றனவும் கண்ணகன்ற சாயலும் இற்பிறப்பும்
பக்கத்தார் பாராட்டப் பாடுஎய்தும் தான்உரைப்பின்
மைத்துனர் பல்கி மருந்தில் தணியாத
பித்தனென்று எள்ளப் படும். 340

## அதிகாரம் 35 — கீழ்மை

கப்பி கடவதாக் காலைத்தன் வாய்ப்பெயினும்
குப்பை கிளைப்புஓவாக் கோழிபோல்—மிக்க
கனம்பொதிந்த நூல்விரித்துக் காட்டினும் '' ன்
மனம்புரிந்த வாறே மிகும். 341

காழாய கொண்டு கசடற்றார் தம்சாரல்
தாழாது போவர்ம் எனவுரைப்பின்—கீழ்தான்
உறங்குவாம் என்றெழுந்து போமாம்அஃது அன்றி
மறங்குமாம் மற்றென்று உரைத்து. 342

பெருநடை தாம்பெறினும் பெற்றி பிழையாது
ஒருநடையர் ஆகுவர் சான்றோர்— பெருநடை
பெற்றக் கடைத்தும் பிறங்கருவி நன்னாட
வற்றாம் ஒருநடை கீழ். 343
தினையனைத்தே யாயினும் செய்தநன்று உண்டால்
பனையனைத் தா வுள்ளுவர் சான்றோர்— பனையனைத்து
என்றும் செயினும் இலங்கருவி நன்னாட
நன்றில நன்றறியார் மாட்டு. 344
பொற்கலத் தூட்டிப் புறந்தரினும் நாய்பிறர்
எச்சிற்கு இமையாது பார்த்திருக்கும் அச்சீர்
பெருமை யுடைத்தாக் கொளினும்கீழ் செய்யும்
கருமங்கள் வேறு படும். 345
சக்கரச் செல்வம் பெறினும் விழுமியோர்
எக்காலும் சொல்லார் மிகுதிச்சொல் —எக்காலும்
முந்திரிமேல் காணிமிகுவதேல் கீழ் தன்னை
இந்திரனா எண்ணி விடும். 346
மைதீர் பசும்பொன்மேல் மாண்ட மணியழுத்திச்
செய்தது எனினும் செருப்புத்தன் காற்கேயாம்
எய்திய செல்வத்தர் ஆயினும் கீழ்களைச்
செய்தொழிலால் காணப் படும். 347
கடுக்கெனச் சொல்வற்றாம் கண்ணோட்டம் இன்றாம்
இடுக்கண் பிறர்மாட்டு உவக்கும் —அடுத்தடுத்து
வேகம் உடைத்தாம் விறல்மலை நன்னாட
ஏகுமாம் எள்ளுமாம் கீழ். 348
பழையர் இவரென்று பன்னாட்பின் நிற்பின்
உழையினியர் ஆகுவர் சான்றோர்—விழையாதே
கள்ளுயிர்க்கும் நெய்தல் கனைகடல் தண்சேர்ப்ப
எள்ளுவர் கீழா யவர். 349
கொய்புல் கொடுத்துக் குறைத்தென்றும் தீற்றினும்
வையம் புண்கல்லா சிறுகுண்டை —ஐயகேள்
எய்திய செல்வத்தர் ஆயினும் கீழ்களைச்
செய்தொழிலால் காணப் 350

## அதிகாரம் 36— கயமை

ஆர்த்த அறிவினர் ஆண்டிளையர் ஆயினும்
காத்தோம்பித் தம்மை அடக்குப—மூத்தொறூஉம்
தீத்தொழிலே கன்றித் திரிதந்து எருவைபோல்
போத்தறார் புல்லறிவி னார். 351

செழும்பெரும் பொய்கையுள் வாழினும் என்றும்
வழும்பறுக்க கில்லாவாம் தேரை—வழும்பில்சீர்
நூல்கற்றக் கண்ணும் நுணுக்கமொன்று இல்லாதார்
தேர்கிற்கும் பெற்றி அரிது. 352

கணமலை நன்னாட கண்இன்று ஒருவர்
குணனேயும் கூறற்கு அரிதால்—குணன் அழுங்கக்
குற்றம் உழைநின்று கூறும் சிறியவர்கட்கு
எற்றால் இயன்றதோ நா. 353

கோட்டந்து அகல் அல்குல் பெண்டிர்தம் பெண்ணீர்மை
சேடியர் போலச் செயல்தேற்றார்—கூடிப்
புதுப்பெருக்கம் போலத்தம் பெண்ணீர்மை காட்டி
மதித்திறப்பர் மற்றை யவர். 354

தளிர்மேலே நிற்பினும் தட்டாமல் செல்லா
உளிநீரர் மாதோ கயவர்—அளிநீரார்க்கு
என்னானும் செய்யார் எனைத்தானும் செய்பவே
இன்னாங்கு செய்வார்ப் பெறின். 355

மலைநலம் உள்ளும் குறவன் பயந்த
விளைநிலம் உள்ளும் உழவன் சிறந்தொருவர்
செய்தநன்று உள்ளுவர் சான்றோர் கயம் தன்னை
வைத்தை உள்ளி விடும். 356

ஒருநன்றி செய்தவர்க்கு ஒன்றி யெழுந்த
பிழைநூறும் சான்றோர் பொறுப்பர்—கயவர்க்கு
எழுநூறு நன்றிசெய்து ஒன்றுதீ தாயின்
எழுநூறும் தீதாய் விடும். 357

ஏட்டைப் பருவத்தும் இற்பிறந்தார் செய்வன
மோட்டிடத்தும் செய்யார் முழுமக்கள்—கோட்டை

வயிரம் செறிப்பினும் வாட்கண்ணாய் பன்றி
செயிர்வேழம் ஆகுதல் இன்று. 358

இன்று ஆதும் இந்நிலையே ஆதும் இனிச்சிறிது
நின்று ஆதும் என்று நினைத்திருந்தும்--ஒன்றி
உரையின் மகிழ்ந்துதம் உள்ளம்வே றாகி
மரையிலையின் மாய்ந்தார் பலர். 359

நீருள் பிறந்து நிறம்பசியது ஆயினும்
ஈரம் கிடையகத்து இல்லாகும்—ஓரும்
நிறைப்பெருஞ் செல்வத்து நின்றக் கடைத்தும்
அறைப்பெருங்கல் அன்னார் உடைத்து. 360

# 7. பன்னெறி இயல்

## அதிகாரம் 37—பன்னெறி

மழைதிளைக்கும் மாடமாய் மாண்பமைந்த காப்பாய்
இழைவிளக்கு நின்றிமைப்பின் என்னும்—விழைதக்க
மாண்ட மனையாளை இல்லாதான் இல்லகம்
காண்டற்கு அரியதோர் காடு. 361

வழுக்கெனைத்தும் இல்லாத வான்வாய்க் கிடந்தும்
இழுக்கினைத் தாம்பெறுவர் ஆயின் —இழுக்கெனைத்தும்
செய்குறாப் பாணி சிறிதேயர் இன்மொழியார்
கையுறாப் பாணி பெரிது. 362

எறியென்று எதிர்நிற்பாள் கூற்றம் சிறுகாலை
அட்டில் புகாதாள் அரும்பிணி—அட்டதனை
உண்டி உதவாதாள் இல்வாழ்பேய் இம்மூவர்
கொண்டானைக் கொல்லும் படை. 363

கடியெனக் கேட்டும் கடியான் வெடிபட
ஆர்ப்பது கேட்டும் அது தெளியான்—பேர்த்தும் ஓர்
இல்கொண்டு இனிதிருஉம் ஏமுறுதல் என்பவே
கல்கொண்டு எறியும் தவறு. 364

அடுக்கடுக்காய்த் துன்பங்கள் வந்த பொழுதும் )ல்லறத்தை விட்டொழிக்காமல் அதிலேயும் சிற்றின்பத்தை நாடுபவன் தாழ்ந்தவன் ஆவான். இன்பம் வரும் போதெல்லாம் அது பிறகு துன்பமாக மாறுவதை எண்ணிப் பார்த்து அவ்வின்பத்தை விரும்பாதவன் உயர்ந்தவன் ஆவான். 60

அதிகாரம் 7. கோபங் கொள்ளாமை

சிலர் நம்மிடம் மரியாதையோடு நடந்து கொள்ளலாம். சிலர் மரியாதையின்றி தரக் குறைவாகவும் நடந்து கொள்ளலாம். எப்படி இருப்பினும் சிறிய பிராணியாகிய ஈ நம்முடைய தலையில் ஏறிய பொழுது அதைப் புறக்கணித்து அதனிடம் கோபம் கொள்ளாதது போல் பிறரிடமும் கோபம் கொள்ளாதிருத்தல் சாலச் சிறந்தது. 61

ஊன் )ய காலை எடுப்பதற்குக் கூட நேரம் இல்லாமல் தொடர்ந்து துன்பங்கள் நேர்ந்த பொழுதும் சிறிதும் கலங்காமல் எடுத்த பல காரியத்தைச் செய்து முடிக்கும் தைரிய சாலிகள், கிடைத்தற்கரிய உயிரை அவமானம் தாங்காமல் கண்டபடி மாய்த்துக் கொள்ள முன் வரமாட்டார்கள். 62

வாயை அடக்காமல் ஒருவன் சொல்லும் தீய சொல் அவனுக்கே தவருமல் துன்பம் விளைவிப்பதை கண் கூடாகக் காண்கிறேம். ஓயாமல் நூல்களை ஆராய்ந்தும், பெரியோர்களிடமிருந்து உண்மைகளை கேட்டும் உணர்ந்த அறிவாளிகள், இவ்வுண்மையை அறிந்து சினங்கொண்ட தீயச் சொல்லை ஒரு பொழுதும் ஒருவர் மீதும் பயன்படுத்த மாட்டார்கள். 63

தன்னை எதிர்த்துக் கொண்டு தரக்குறைவான சொற்களை பயன்படுத்தும் கீழ்த்தரமானவர்களைக் கூட மேன்

மக்கள் மனம் குமுறி கோபித்துக் கொள்வதில்லை. அதே சொற்களைக் கேட்டு பொறுக்காமல் மனதுக்குள் நன்கு ஆராய்ந்து அதை ஊர் முழுவதும் பறைசாற்றி, சுவற்றிலே மோதி, துள்ளி எழுந்து தூணிலே முட்டிக் கொள்வர் கீழ் மக்கள். 64

இளமையிலேயேசெய்யும் புலனடக்கத்தையே உண்மை யான அடக்கம் எனவும், வருவாய் இன்றி கையிலுள்ள பணத்திலிருந்து தானம் செய்வதால் தான் உண்மையான பயன் உண்டாகும் என்றும் நல்லோர் கூறுவர். அதேபோல் உலகம் யாவையும் அழிக்கவல்ல வலிமை பெற்றிருந்தும் பிழை செய்தவனிடம் கோபம் கொள்ளாமல், செய்த பிழையை பொறுத்துக் கொள்பவனுடைய பொறுமையே உண்மையான பொறுமையாகும். 65

விபூதியை ஜபித்து மேலே தூவினால் நாகப்பாம்பு படம் எடுக்க முடியாமல் தடைப்பட்டு அடங்கி விடும். அவ்வாறே ஒழுக்க நெறியிலே செல்லும் தவசிகள் தம்மைக் குறித்துக் கயவர்கள் சொல்லும் சொற்கள் கல்லடி பட்டாற்போல் மிக்க துயரத்தைத் தந்தாலும் அதைப் பொருட்படுத்தாமல் பலர் முன்னிலையில் அதைப் பொறுத்துக் கொள்வர். 66

நமக்கு அபகாரம் செய்தவர்க்கு பதிலுக்கு அபகாரம் செய்யாது இருப்பதை பலஹீனமாக கற்றோர்கள் ஒரு பொழுதும் எண்ணமாட்டார்கள். எனவே பொறுமை இழந்து, துன்பம் விளைவிப்போருக்கு பதிலுக்கு துன்பம் விளை விக்காது இருத்தல் மிகமிக நல்லது. 67

அற்பர்களுடைய சினம் பல காலம் கழிந்த பிறகும் தணி யாமல் வளர்ந்து கொண்டே போகும். சூடாக்கப்பட்ட தண்ணீரில் உள்ள உஷ்ணம் முறையே தானாகக் குறைந்து விடுவதுபோல் ஒழுக்கம் உள்ள நல்லோர்களுடைய கோபம் தானாக சிறிது நேரத்தில் மறைந்து விடும். 68

செய்த உதவியை மறந்து நமக்கு ஒருவன் தீங்கு விளைவிக்கலாம். அப்படிப்பட்டவனுக்கும் தொடர்ந்து நாம் உதவி செய்து வர வேண்டும். அவன் செய்த குற்றத்திற்காக அவனுக்கு ஒருநாளும் தீங்கு விளைவிக்கலாகாது. இதுவே புகழ் மிக்க குலத்தில் பிறந்த துறவிகளின் இயல்பாகும். 69

சினங்கொண்ட நாய், கவ்விப் பிடித்து மனிதனை கடிக்கும் பொழுது மனிதன் அதை பதிலுக்குத் திரும்பிக்கடித்த செய்தியை நாம் இதுவரை கேட்டதில்லை. அவ்வாறே பண்பின்றி தரக்குறைவான சொற்களைக் பயன்படுத்திய அற்பர்கள் விஷயத்தில் அதே சொற்களை நல்லோர் திரும்பிப் பயன்ப மாட்டார்கள். 70

அதிகாரம் 8 இல்லறவியல்

மாலை போல் வளைந்த அருவிகளும் குளிர்ச்சியும் பொருந்திய பல மலைகள் கொண்ட பாண்டிய நாட்டின் தலைவனே! அறிவில்லாதவனோடு எந்த விஷயத்தையும் பேசாதே. தவறிப் பேசினால் அவன் வரம்பின்றி ஏசுவான். எனவே முடிந்தவரை அவனுடன் தொடர்பை அறுத்துக் கொள்வது மிகச் சிறந்த வழியாகும். 71

தனக்குச் சரிசமம் இல்லாத கீழ்மக்கள் பேசும் தகாத சொற்களை பொறுத்துக் கொள்ளுதல் மேலோர்களின் பண்பாகும். அவ்வாறின்றி அதே தகாத சொற்களைக் கூறுவதால் புகழ் கிட்டுவதற்குப் பதிலாக பழிதான் வந்து சேரும். ஆழமான கடல்சூழ்ந்த மண்ணுலகில் வாழும் பெரியோர்கள் இதையே கூறுகிறார்கள். 72

வண்டுகள் நிரம்பி பூக்கள் பூத்துக் குலுங்க, குளிர்ந்த கடற்கரையை உடைய மன்னனே! நல்லது கெட்டது அறிய

உதவும் பகுத்தறிவு கொண்ட அன்பர்கள் சொல்லும் கடினச் சொற்கள், பகைவர் கூறும் இனிய சொற்களைப் போல் தீமை பயக்க மாட்டா; மாறாக நன்மையையே தரக் கூடியவை. 73

அறிய வேண்டியவற்றை யெல்லாம் அறிந்து கொண்டு பொறுமையோடு இருக்க வேண்டும். பழி பாவங்களுக்கு அஞ்சி உலகத்தார் போற்றும்படி காரியங்களைச் செய்ய வேண்டும். அதன் பயனாய் இன்பம் பெற்று வாழ்கிறவர்கள் ஒரு பொழுதும் துன்பம் பெற மாட்டார்கள். 74

ஒற்றுமையாய் அன்போடு கலந்து பழகும் இருவர்களுள் ஒருவன் தீய ஒழுக்கம் உள்ளவனாகில், மற்றவன் அவனுடைய நடத்தையை முடிந்தவரை பொறுத்துக் கொள்ள வேண்டும். பொறுக்க முடியா விடில் அவனுடைய தீய ஒழுக்கத்தை வெளியில் சொல்லலாகாது. அவனுடன் நட்பை வேண்டுமானால் அறுத்துக் கொள்ளலாம். அது தவறில்லை. 75

காடுபடர்ந்த நாட்டின் தலைவனே! நண்பன் நமக்குத் தீமையைச் செய்தாலும் அது நன்மையாகவே முடிய வேண்டும் என்று எண்ணி, தான் செய்த பாவத்தின் பயனே என்றெண்ணிக் கொள். அண்டிப் பழகிய நண்பனோடு உறவை அறுத்துக் கொள்ளாதே. நட்பு கொண்ட பிறகு அதை முறித்துக் கொள்ளும் பழக்கத்தை பகுத்தறிவற்ற மிருகங்களிடத்தேயும் காண முடியாதன்றோ? 76

ஓவென ஓசையோடு பெருகி வரும் அருவிகளை பெருக்கும் மலை நிறைந்த நாட்டின் தலைவனே! தாம் செய்த பிழையையும் பொறுத்துக் கொள்வர் என்ற எண்ணத்தினால் தான் ஒழுக்கம் நிறைந்த பெரியோர்களோடு மக்கள் அனைவரும் நட்புக் கொள்ள விரும்பி முன் வருகிறார்கள். நல்ல காரியங்களைச் செய்பவரோடு நட்புக் கொள்ள முன் வருகிறவர்களை உலகில் ஏராளமாகக் காண்கிறோம் அல்லவா? 77

.டல் உலர்ந்து கொடிய பசி உண்டாகி, உயிர் போகும் நிலை ஏற்படினும் தனது துயரத்தை பண்பில்லாதவர்களிடம் சொல்லலாகாது. வறுமை நிலையிலும் உயிரைத் துறக்க விருப்பமின்றி உயிர் வாழ விரும்புகிறவர்கள், தமது வறுமையைத் தீர்க்கவல்ல நல்ல நண்பர்களிடமே அதைச் சொல்ல முன் வருவார்கள். 78

உயர்ந்த நீரருவி நிறைந்த நாட்டின் தலைவனே! நாம் செய்யும் ஒரு காரியம் இன்பத்தோடு சிறுமையையும் கலந்து அளிக்க நேரிடலாம். அப்பொழுது இன்பத்தை நீ விரும்பினாலும் சிறுமை கலக்காத இன்பத்தைப் பெறவே முயல வேண்டும். 79

தனக்குத் தீங்கு நேரிடினும் அதற்காக நல்லவர்களுக்குத் தீங்கு செய்ய எண்ணலாகாது. பசியால் உடல் உலர்ந்து இளைத்துப் போன பிறகும் தகாதவர்கள் கையால் இட்ட உணவை அருந்தலாகாது. வானம் சூழ்ந்த உலகம் முழுவதும் கிடைக்க வாய்ப்பு நேரிட்டாலும் அதற்காகப் பொய் கலந்த பேச்சைப் பேசலாகாது. 80

## அதிகாரம்--9. அயலான் மனைவியை விரும்பா திருத்தல்

அயலான் மனைவியைப் புணர்வதால் வரும் இன்பத்தைக் காட்டிலும் புணரும்பொழுது கணவன் வந்து விடுவானோ என மனதுக்குள் உண்டாகும் பயம் அளவிலே மிகப் பெரியது. உண்மையை ஆராய்ந்து பார்த்தால் அயலான் மனைவியைப் புணர்வதால் அரச தண்டனை இம்மையில் கிடைக்கும். மறுமையில் கும்பீபாகம் என்ற கொடிய நரகத்திற்கு வழிகோலும் பாவம் உண்டாகும். எனவே பழிபாவங்களுக்கு அஞ்சுகிறவர்கள், அயலான் மனைவியை மனத்தாலும் எண்ணாதிருக்கல் வேண்டும். 81

மாற்றான் மனைவியை விரும்பிச் செல்லுகிறவர்கள் தர்மம், கீர்த்தி, நட்பு, மரியாதை ஆகிய நான்குவித நன்மைகளை அடைய மாட்டார்கள். அதற்கு மாறாக விரோதம், பழி, பாவம், பயம் ஆகிய நான்கு தீமைகளை அவர்கள் அடைவார்கள். 82

மாற்றான் மனையாளைப் புணர அவள் வீட்டில் புகும் பொழுதும் பயம். திரும்பி வரும் போதும் பயம். அவளைப் புணரும் போதும் பயம். இச் செய்தி வெளி வராமல் உள்ளே மறைக்க முயலும் போதும் பயம் உண்டாகிறது. எனவே எல்லா வகையிலும் அச்சத்தை அளிக்கும் இக் காரியத்தை தைரியமாய் மனிதன் எதற்காகச் செய்யத் துணிகின்றானோ தெரியவில்லை. 83

மாற்றான் மனைவியிடம் இன்பம் அனுபவிக்கும் பொழுது விஷயம் ஊராருக்குத் தெரிந்து விட்டால் குடும்ப கௌரவம் பறி போய்விடும். கையில் அகப்பட்டால் கணவன் காலை வெட்டி விடுவான். பண்பில்லாத இச் செயலைச் செய்யும் பொழுது உனக்கே உள்ளூர பயம் ஏற்படும். அத்துடன் வெகு காலம் அனுபவிக்கக் கூடிய நரகமும் கிட்டும். தீய நடத்தை உடையவனே! இதில் எத்தனை சுகம் கண்டு விட்டாய்; அதை எனக்குச் சொல். 84

பழி பாவங்களுக்கு அஞ்சாமல் நீச சகவாசத்தின் பயனாய் அழகிய மார்பகத்தை உடைய பெண்களைச் சேர விரும்பி, இளமைத் துடிப்புடன் மாற்றான் மனைவியை முற்பிறவியில் புணர்ந்தவர்கள், இப்பிறவியில் நபும்ஸகர்களாய்ப் பிறந்து கூத்தாடித் தொழில் செய்து வாழ்க்கை நடத்தும் நிலையை அடைவார்கள். 85

நல்ல நாள் பார்த்து பலர் அறிய மேளம் கொட்டி ஒருவளை மணம் புரிகிறான் மனிதன். வந்தவளும் அடங்கி நற்பண்பும், அன்பும் கொண்டு வீட்டில் வாழ்கிறாள்.

அப்படி இருக்க, அவன் மாற்ருன் மனையாளை விரும்புவது எதற்காகவோ தெரியவில்லையே! 86

பிறன் மனையாளை இரகசியமாய்ச் சேர்ந்து புணர்ந்தால் பிறர் ஏசுவார்கள். அதைக் கேட்டு இவனுக்கு என்ன கேடு நேரிடுமோ என உறவினர் பயப்படுவார்கள். மனதில் அமைதியின்றி அனுபவிக்கும் சுகானுபவம், பாம்பின் தலையைத் துணிந்து நாவால் நக்கும் தொழிலைப் போல ஆபத்தை விளைவிக்கும் தன்மையுடையது. 87

புத்திமான்களுக்கும் ஒரு சமயம் காமம் ஏற்படுவது உண்டு. அவர்கள் பிறரைக் கண்டு நாணும் இயல்புடையவராதலால் அவர்களுக்கு ஏற்படும் காமநோய் பரவுவதில்லை. வெளிப்படையாகத் தெரிவதும் இல்லை. உள்ளேயே அடங்கி இருந்து மன வேதனையைத் தருவதால் மிகமிகக் கொடியது இது. 88

பாணம், தீ, கிரணங்களைக் கொண்ட சூரியன் ஆகியவைகள் வெப்பத்தால் உடலைத்தான் தாக்கக் கூடியவை, உள்ளத்தை அல்ல. பெண்ணாசையாகிய தீ உள்ளத்தையே தனது வெப்பத்தின் மூலம் கொளுத்துவதால் கீழ்க் கூறிய மூன்று பொருள்களைவிட காமத் தீயைக் கண்டுதான் மிகவும் அஞ்ச வேண்டும். 89

ஊர் முழுவதும் நெருப்பு, கொழுந்துவிட்டு எரியும் பொழுது அதில் சிக்கிக் கொண்ட மனிதன், நீரில் மூழ்கி ஒருவாறு தப்பித்துக் கொள்ளலாம். ஆனால் உடலுக்குள்ளே தோன்றி கொளுத்தும் காமத்தீ, மலையில் ஓடி ஒளிந்து கொண்டாலும் நீரில் மூழ்கி மறைந்தாலும் மனிதனை வருத்தாது விடுவதில்லை. 90

## அதிகாரம் 10. தானம்

மனிதனுக்கு வறுமை வருவது சகஜம். அந்நிலையிலும் செல்வம் இருந்த காலத்தில் செய்தது போல் முடிந்தவரை

வறியவர்களுக்குக் களிப்போடு பொறுமையாய் தானம் செய்ய வேண்டும். அவ்வித நற்பண்பு படைத்தவனை சொர்க்க லோகம் திறந்த கதவுடன் வரவேற்கக் காத்துக் கொண்டிருக்கும். 91

மரணம், கிழத்தன்மை, உடல்வலிமையைப் போக்க வல்ல பிணி ஆகியவைகள் எதிர் காலத்தில் உனக்கு வரக் காத்திருப்பதை உன் கண் முன்னாலேயே காண்கிறாய். எனவே செல்வம் இருக்கும் பொழுது மறுபடியும் அதைத் தேடி வீணாக அலையாதே. கையிலுள்ள பணத்தை கஞ்சத் தனமாகப் பூட்டியும் வைக்காதே. உள்ள உணவை மற்றவர் களோடு பகிர்ந்து உண். பிறர் கேட்கும் பொழுது இரு ப்பதை இல்லையென்று சொல்லி மறைத்து வைக்காதே. 92

பிறருக்குக் கொடுத்துத் தானும் அனுபவித்துச் செலவு செய்தாலும், காலம் ஒத்துவந்தால் செல்வம் வளர்ந்து கொண்டே போகும். முற்பிறவியில் செய்த புண்ணியம் தீர்ந்து போன பிறகு கெட்டியாகப் பிடித்துக் கொண்டா லும் நிலைத்து நிற்காமல் செல்வம் அழிந்து போகும். இவ் வுண்மையை அறியாதவர்கள் தன்னை அண்டியவர்களின் துயரத்தைத் துடைக்கத் தகுதியற்றவர் ஆவர். 93

ஏழைகளுக்குக் கொடுக்காமல் புசித்தால் ஆழமான கடல் சூழ்ந்த மண்ணுலகில் பிறந்து, அடுப்பு மூட்டி சமைக் கூடத் தகுதியற்ற ஏழைகள், அவர்களைக் கஞ்சர்கள் எனத் தூற்றுவார்கள். ஆகையால் அவரவர் தகுதிக்கு ஏற்றவாறு இம்மியளவு அரிசியாவது கொடுத்துப் பிறகு உணவு அருந்த வேண்டும். 94

இம்மை, மறுமையென இருவிதப் பயனைக் கருதி, பிற ருக்கு முடிந்த வரையில் தானம் செய்ய வேண்டும். தானம் செய்யத் தகுதியில்லையேல் பிறரிடம் சென்று இரக்காமல் இருத்தல் நலம். அதுவே கொடுப்பதைவிட இருமடங்கு பயன் தர வல்லது. 95

ஊருக்கு உதவும் நல்லோர்கள், ஊர் நடுவே திண்ணை நாற்புறமும் சூழக் காய்த்துக் குலுங்கும் பெண் பனைமரத்தைப் போன்றவர். செல்வம் இருந்தும் பிறருக்கு அளிக்காமல் தானும் உண்ணுமல் வாழ்கிறவர்கள் சுடுகாட்டில் காய்க்காத ஆண் பனை மரத்தைப் போல் பயனற்றவர் ஆவார்கள். 96

அலை மோதும் குளிர்ந்த கடற்கரையிலே பூத்திருக்கும் புன்னை மலர்கள் மீன்களின் புலால் நாற்றத்தைப் போக்குகின்றன. அப்படிப்பட்ட நாட்டின் தலைவனுன பாண்டியனே! காலத்தில் மேகங்கள் நீரைப் பொழியாமல் போனுல், நல்லோர் தக்க காலத்தில் தானம் செய்யாது போனுல், உலக மக்கள் வாழ்வதே அரிதாகி விடும். 97

குளிர்ந்த கடற்கரைக்குரியவனே! பதில் உபகாரம் செய்ய வல்லவர்களுக்குத் தானம் செய்வது, கடன் கொடுப்பதற்கு ஒப்பாகும். கை நீட்டி யாசகம் கேட்கும் பொழுது இல்லையென்று கூறுமல் தன்னிடம் உள்ள பொருளைத் தனக்கென்று வைத்துக் கொள்ளாமல் திருப்பித்தர சக்தி இல்லாத யாசகர்களுக்கு தானம் செய்வதுதான் உத்தம புருஷர்களின் இலக்கணமாகும். 98

தன்னிடம் உள்ள செல்வம் சிறிதளவே என எண்ணக் கூடாது. கேட்பவர்களுக்கு இல்லையெனச் சொல்லவும் கூடாது கேட்பவர்களுக்கு எப்பொழுதும் தானம் செய்து வரவேண்டும். முறையே பல வீட்டு வாசற்படிகளை ஏறி, இறங்கிப் பிச்சை எடுக்கும் துறவிகளின் பிட்சாபாத்திரம் சிறுகச் சிறுக நிரம்பிவிடுவது போல், தானம் செய்பவனுடைய தான புண்ணியமும் முறையே வளர்ந்து வரும். 99

தடியால் அடித்து எழுப்பிய முரசின் ஒலி, காத தூரம் வரை சென்று ஒலிக்கும். மேகங்கள் கர்ஜித்து எழுப்பும் ஒலி, யோசனை தூரம் சென்று ஒலிக்கும். "இவன் யாசகர்

களுக்கு இல்லையென்னுமல் கொடுத்தான்'' என்று பெரியோர்கள் சொன்ன ஒலி, அடுக்கடுக்காய் அமைந்திருக்கும் மூன்று உலகம் வரை சென்று ஒலிக்கும். 100

## அதிகாரம் 11. முன்வினை

ஆயிரக் கணக்கான பசுக்கள் கூடியிருக்கும் மந்தையிலே புகுந்த இளம் பசுங்கன்று தனது தாயை எப்படியோ தேடிப் பிடித்து சேருவதை உலகில் காண்கிறோம். அவ்வாறே முற்பிறவியில் செய்த வினைகள், கோடிக் கணக்கான ஜீவராசிகளின் நடுவிலே புகுந்து அதற்குரியவன் எவனோ அவனைக் குறி தவறாமல் தேடிப் பிடித்துப் பயனை அளிப்பதில் வல்லமை பெற்றவை. 101

அழகு, இளமை, செல்வம், கௌரவம் இவையெல்லாம் சேர்ந்து ஒரே பிறவியில் ஒரே மனிதனிடம் அமைவது அரிது. இதையறிந்து ஒருவன் ஏதாகிலும் ஒரு வழியில் சிறியதொரு நல்ல காரியத்தையாவது செய்து வைக்க வேண்டும். அப்படிச் செய்யாவிடில் சிறிது காலமே அனுபவிக்கக் கிடைத்த உடலை சரியாகப் பயன்படுத்திக் கொள்ளாமலே வீணாக்கிக் கொள்கிறான், நிலையற்ற வாழ்க்கையிலே அவன். 102

கிளங்கனி கருக் கறுமை நிறமும், விளாங்காய்க்கு உருண்டை உருவமும் இயற்கையாய் அமைந்தவை. அதை அவ்வாறு எவனும் முன்பு திட்டமிட்டு ஆக்கி வைக்கவில்லை. அதே போல் ஒருவனுடைய சுகானுபவங்களும் அவனுடைய வினைக்கு ஏற்றவாறு முன்பே அளவு செய்து வைக்கப்பட்டு இருகின்றன. அதன்படிதான் நடக்கும். ஆனால் செல்வத்தால் சுகபோகங்கள் கிட்டும் என அனைவரும் ஆசைப் பட்டு வீணே ஏமாறுகிறார்கள். 103

பொழியாத மழையைப் பொழிய வைக்கவோ, அதிகமாகப் பெய்யும் மழையைத் தடுத்து நிறுத்தவோ முனிவர்

களாலும் முடியாது. அவ்வாறே வினைப்பயனால் வர வேண்டிய தீமைகளைத் தடுத்து நிறுத்தவோ, வர வேண்டிய நன்மைகளை வராமல் தடுக்கவோ முனிவர்கள் முயன்றாலும் முடியவே முடியாது. 104

பல பெரியோர்கள் சிறுகச் சிறுக மதிப்பை இழந்து, சிறுமைக்கு உள்ளாகி ஒளி மயங்கி உலகில் உயிர் வாழ்வதைக் கண்கூடாகப் பார்க்கிறோம். முற்பிறவியில் செய்த தீவினையைத் தவிர வேறு எதையும் இதற்குக் காரணமாகக் கூற முடியாது. 105

பலவாறு பலரிடமிருந்து பல விஷயங்களைக் கேட்டு அறிவு பெற்று வாழ்க்கையின் ரகசியத்தை நன்குணர்ந்த அறிஞர்கள் விரைவில் மரணமடைகிறார்கள். படிக்காத அறிவிலிகள் வெகு காலம் உலகில் உயிர் வாழ்கிறார்கள். அறிவில்லாத மனிதனை சாரமற்ற சக்கையென்று எமன் எடுத்துச் செல்லாமல் விட்டு விடுவது தான், அறிவில்லாதவன் வெகு காலம் வாழ்வதற்கும் மற்றவன் சீக்கிரம் மறைவதற்கும் முக்கிய காரணமாகும். 106

அடுப்பம் பூக்களை அன்னப்பறவைகள் மூக்கால் குத்திக் கிழித்து விளையாடுமிடமான கடற்கரைக்குத் தலைவனான பாண்டியனே! பலர் பரிதாபப்பட்டுப் பார்க்கும்படி வீடு தோறும் சென்று வெகுநேரம் வாயிலில் நின்று சிலர், பிச்சையெடுத்துக் கஷ்டப்படுகிறார்கள். அவர்கள் முற்பிறவியில் செய்த தீவினையே அதற்குக் காரணம் என்பதில் ஐயமில்லை. 107

காற்றினால் அசைந்தாடிய நெய்தல் மலர்கள் தேனைச் சொரிய. அந்தத் தேனினால் நனைந்த குளிர்ந்த கடற்கரைக்குச் சொந்தமான பாண்டிய மன்னனே! எல்லா விஷயமும் நன்கு தெரியும். அப்படி எல்லாவற்றையும் நன்கு அறிந்திருந்தும் சிலர் முற்பிறவியில் செய்த தீவினையால்

ஏவப்பட்டு பழிக்கும் படியான காரியங்களைச் செய்கிறார்கள். 108

கடல் சூழ்ந்த மண்ணுலகில் "சிறிதளவு தீமை கூட வரக்கூடாது, நன்மையே வர வேண்டும்" என அனைவரும் எண்ணுகிறார்கள். ஆனால் நினைத்தபடி நடப்பதில்லை. முற் பிறவியல் செய்த வினைப்பயனாய் நன்மையும் தீமையும் தவறாமல் ஒருவனை வந்தடைகின்றன என்பதை எவனும் உணர்வதில்லை· அந்தோ பரிதாபம்! 109

மனிதன் பிறக்கும் பொழுது 'இதை அனுபவிக்க வேண்டும்' என்று அவன் தலையில் எழுதி வைத்த ஊழ்வினை கள் சிறிதளவும் குறையா; வளரவும் வளரா. முறை மாறி ஒரு பொழுதும் பயனை அளிக்கா. துயரம் வரும் பொழுது அதைப் போக்கவும் பயன்படாது. பயன் அளிக்க வேண்டிய சமயம் வந்த பொழுதுதான் பயனைத் தரும். அப்படியிருக்க தீவினைப்பயனால் தீங்கு நேரும் பொழுது மனிதன் ஏன் வருந்த வேண்டும்.? 110

## அதிகாரம்-12 வாய்மை

முழுக்கடுக்காய் வளையணிந்தவளே! இதைக் கேளாய். தன்னால் கொடுக்க முடியாத பொருளை 'வேண்டும்' என்று யாசகன் கேட்கும் பொழுது, இல்லையென்று சொல்வது குற்றமன்று. இது உலக இயல்பே. ஆனால் "நாளை வா" தரு கிறேன், என்று சொல்லி அலைக்க வைத்து முடிவில் நம்பிக்கை இழக்கும்படி யாசகனை ஏமாற்றுவது, செய்த நன்றி மறப்ப தால் உண்டாகும் பாவத்தை விட மேலான பாவத்தைத் தரவல்லது. 111

யார் தின்றாலும் வெல்லக்கட்டி தன் இயல்பான இனிமைக் குணத்தை மாற்றிக் கொள்வதில்லை, தேவர்கள்

தின்றாலும் கசப்பான வேப்பங்காய் இனிமையைப் பெறாது. அதே போல் நல்லோர், தீயோர் இருவரும் யார் சொல்லியும் தங்கள் இயல்பான குணங்களை மாற்றிக் கொள்ளாமல் உள்ள நிலையிலே இருப்பார்கள். 112

குளிர்ந்த மலைகள் நிரம்பிய நாட்டின் தலைவனே! ஒருவனுக்குச் செல்வம் வந்திடின் வானத்தில் நூற்றுக்கணக்கான நட்சத்திரங்கள் திடீரெனத் தோன்றுவது போல் பலர் வந்து அவனுடன் உறவு கொண்டாடுவார்கள். மீளாத் துயரத்தை அடைந்த காலத்தில் அவனை உறவுக்காரன் என்று சொல்லி அவனுடன் நட்புக் கொள்ள முன் வரும் பண்பு சிலருக்கே உண்டு. 113

இவ்வுலகில் அறம், பொருள், இன்பம் என்ற இம் மூன்றினுள் நடுவிலுள்ள பொருளையடைந்து விட்டால் முன்னும் பின்னும் உள்ள அறம், இன்பம் இரண்டையும் எளிதில் தானாகப் பெற்று விடலாம். பொருளைப் பெற மாட்டாத ஒருவன், கொல்லன் பட்டறையில் அகப்பட்டு அடி வாங்குவதால் உண்டாகும் துயரத்தையொத்த துயரத்தை அடைவது திண்ணம். 114

உயர்ந்த பசு ஜாதியைச் சேர்ந்த கன்றுக் குட்டியும், அதிக விலைக்கு விற்பனையாவது போல் படிக்காத பணக்காரனுடைய வாய்ச் சொல்லுக்கு மக்களிடையே செல்வாக்கு அதிகம் கிடைக்கிறது. அதிக ஈரம் இல்லாத பூமியை உழுவதால் பயன் ஏதும் இல்லாதது போல் படித்த ஏழையினுடைய பேச்சு மக்களிடையே அதிக பயனைத் தராது. 115

பால், தயிர், நெய், பெருங்காயம், உப்பு எல்லாம் சேர்த்து நன்கு சமைக்கப்பட்டாலும் இயற்கையான கசப்பு குணம் பேய்ச் சுரைக்காயை விட்டு அகலுவதில்லை. அவ்வாறே இயற்கையாய் அடக்ககுணம் இல்லாதவர்கள், பல தத்துவ நூல்களை விழுந்து விழுந்து எவ்வளவு முறை

படித்தும் அடக்க குணத்தை ஒருக்காலும் பெறமாட்டார்கள். விசாலமான கண்களை உடையவளே, இவ்வுண்மையைக் கேளாய். 116

புன்னைமலர் மணம் வீசும் சோலையருகே அமைந்த கடற்கரைக்குத் தலைவனே! காரணமின்றி தன்னை ஒருவன் பழித்தால் என்ன தீங்கு நேருமோ என்று அஞ்சாமல் பழித்தவனை பதிலுக்குப் பழிப்பது தவறன்று. ஊழ்வினையின் படி அவனவனுக்கு வரவேண்டிய நன்மை, தீமைகள் எப்படியும் வரத்தான் போகின்றன. அதற்காக ஏன் பயந்து பழிக்காமல் இருக்க வேண்டும். 117

வெவ்வேறு நிறமுடைய பசுக்கள் தங்கள் நிறத்துக்கேற்றவாறு வெவ்வேறு நிறமுள்ள பாலை அளிக்காமல் யாவும் ஒரே வெண்ணிறமான பாலை அளிப்பதைப் பார்க்கிறோம். அவ்வாறே தருமத்தைப் பெற தானம், தவம் வழிபாடு போன்ற வழிகள் பல இருக்கலாம். ஆனால் எல்லா வழிகளாலும் கிடைக்கும் தருமமோ தருமப்பயனோ ஒரு பொழுதும் வேறுபடுவதில்லை. 118

நன்கு ஆராய்ந்து பார்த்தால் உலகில் பழிச்சொல்லுக்கு ஆளாகாதவன் ஒருவனுமில்லை. ஏதாவது ஒரு தந்திரம் செய்யாமல் நேர்மையாய் வாழ்ந்தவனும் உலகில் இல்லை. வாழ் நாளில் இடையிடையே இன்னலின்றி வாழ்ந்தவனும் உலகில் இல்லை. கடைசி வரை ஒருவனும் செல்வத்தோடு ஒரே சீராய் வாழ்ந்து பார்த்ததும் இல்லை. 119

உடலை விட்டு உயிர் வெளியேறும் போது அவன் செய்த நல்வினை, தீவினை தவிர வேறு ஒன்றும் உடன் செல்வதில்லை. காலன் உயிரைக் கவர்ந்து செல்லும் போது அலங்காரம் செய்து பாடுபட்டுக் காப்பாற்றிய உடலே அவனுடன் செல்ல முடியாமல் பயனற்றுப் போய் விடுகிறதே; மற்றவை பற்றிக் கேட்கவா வேண்டும்! 120

## அதிகாரம் 13 தீவினையைக் கண்டு அஞ்சுதல்

துறவற வழிச் செல்லாமல், இல்லறத் துன்பங்களிலே அகப்பட்டு வருந்தும் மக்களைக் கொளுத்தும் சுடுகாடு உலகி லுள்ள சுடுகாடு. புலால் உண்ணும் புல்லறிவாளர்களுடைய வயிறு பறவைகளுக்கும் மிருகங்களுக்கும், சுடுகாடாய்ப் பயன்படுகிறது. 121

வண்டுகள் நிரம்பிய காடுகளிலே சுதந்திரமாய்த் திரிந்து விளையாடும் கௌதாரி போன்ற பறவைகளைப் பிடித்துக் கூட்டில் வைத்து வளர்க்கக்கூடாது. அவ்வாறு வளர்ப்பவர் கள் மறு பிறவியில் காலில் இரும்புச் சங்கிலி அணியப் பெற்று பிறருக்கு அடிமைகளாய் நன்செய், புன்செய், நிலங் களில் வேலை செய்ய வேண்டிய நிலைக்கு ஆளாவார்கள். 122

நண்டின் காலை முறித்து முற்பிறவியில் ஆசையோடு தின்ற பாவம்தான். இப்பிறவியில் கால் விரல்கள் அழுகி தொழு நோயால் வருந்தும் நிலைக்கு மனிதனை ஆளாக்கு 123

உடலுக்கு உறுதியளிக்க வல்ல நெய், நெருப்பு சேர்ந்து உருகிய பொழுது அதே உடலைச் சுட்டுப் பிணி யுண்டாக்குவதைப் பார்த்திருக்கிறோம். அவ்வாறே நல் லொழுக்கம் உள்ள நல்லோர்கள், தீயவர்களின் சேர்க்கை யால் நல்லொழுக்கத்தை இழந்து தீமையைச் செய்கிறார்கள். 124

அறிவினால் உயர்ந்த பெரியோர்களுடன் செய்து கொள்ளும் நட்பு, பிறைச் சந்திரனைப் போல் நாள் தோறும் முறையே வளர்ந்து கொண்டே போகும். அறிவினால் சிறி யவர்களான மட்டமானவர்களுடன் கொள்ளும் நட்பு, வானத்தில் செல்லும் பூர்ண சந்திரனைப் போல் தினந் தோறும் முறையே தானாக பிறர் முயற்சியின்றிக் குறைந்து கொண்டே வரும். 125

ஒருவனை நற்குணம் பொருந்தியவன் என முடிவு செய்து அவனுடன் சேர்ந்த பிறகும் அவனிடம் உள்ள நற்பண்புகளைப் பெருமல் நீ அடையும் ஏமாற்றம், வாசனைப்பொருள் உள்ளே இருக்கும் என்ற ஆசையால் ஒரு பெட்டியைத் திறந்த பொழுது அதிலிருந்து பாம்பு வெளிப்பட்டால் ஒருவனுக்கு ஏற்படும் ஏமாற்றத்திற்கு ஒப்பானது ஆகும். ஆசையோடு நட்புக் கொள்ள முன் வந்தவனே! இதைக் கேளாய். 126

சிறந்த ரத்தினங்கள் நிரம்பிய மலைகளால் சூழப்பட்ட நாட்டின் தலைவனே! கேளாய். உலகில் மக்கள் சொல்வது ஒன்று; செய்வது வேறு. எனவே ஒருவனுடைய செய்கையைக் கொண்டு அவன் எண்ணத்தை ஆராய்ந்து அறியும் திறமை பெற்றவன் எவனுமில்லை. 127

மலைகளிலிருந்து வரும் நீர்வீழ்ச்சியால் சேற்றை அகற்றிப் புனிதமாக்கும் நாட்டின் தலைவனே! பிறர் நலம் கருதாது மனப்பூர்வமாக நட்பு கொள்ளாமல் சுயநலத்திற்காக வஞ்சமாய் நட்பு செய்பவனுடைய அதிகமான நட்பு, நாளடைவில் குற்றம் தருவதாய் மறைந்து போகும். 128

பகைவர்களைக் கொல்வதற்கு அவர்கள் மேல் ஏவிய கத்தி, தவறி பகைவன் கையிலே அகப்பட்டு விட்டால் அது அவனை மாய்ப்பதற்கு மாருக, அது தன் பலத்தையே அழித்து விடுவது உறுதி. அவ்வாறே மூடர்களுக்குச் செய்யும் உதவி, இம்மையிலும் மறுமையிலும் தீமைவிளைவிப்பதால் அவர்களிடமிருந்து விலகி இருத்தல் சாலச் சிறந்தது. 129

செய்யும் தருமம் சிறிதளவாயினும் அதைத் தவிர உயிர் உய்வதற்கு வேறுவழியில்லை. அதைச் செய்து உய்ய வழி தேடாமல் ஓ மனமே! மனைவியிடம் பாசம் கொண்டு மக்களுக்காகப் பாடுபட்டு எத்தனை நாள் தான் வாழ்ந்து காலத்தை வீணுக்கப் போகிருயோ? சொல். 130

# 1. இராஜ தர்மாத்தியாயம்

அதிகாரம்-14

கல்வி

அழகிய குடுமியோ, வண்ணக்கரை புனைந்த மடிப்புடன் கூடிய ஆடையோ, சந்தனம், மஞ்சள் போன்ற பூச்சுப் பொருள்களோ மனிதனுக்கு ஒருக்காலும் அழகை அளிக்காது. உள்ளத்தில் நற்பண்பை வளர்க்கவல்ல கல்வி ஒன்றினால் தான் உண்மையான அழகைப் பெறுகிறான் மனிதன். 131

)வ்வுலகில் கற்பவனுக்கு அறிவை ஊட்டுகிறது கல்வி. பிறருக்குக் கொடுத்தாலும் செல்வம் போல் குறை யாமல் வளர்ந்து கொண்டே போகிறது. புகழை அளித்து மனிதனுக்கு விளம்பரத்தைத் தேடித் தருகிறது. மனித னுள்ளவரை அது அழியாமல் நிலைத்து நிற்கிறது. எனவே பிணியைப் போக்குவதிலே கல்வி போன்ற மற்றொரு மருந்தை உலகில் காண்பதரிது. 132

மட்டமான களர் பாய்ந்த நிலத்திலே பயிர் செய்த உப்பின் சேர்க்கையின்றி உணவு ருசிக்காது. ஆகையால் நல்ல நிலத்தில் விளைந்த நெல்லைக் காட்டிலும் உப்பை முக்கிய வஸ்துவாகக் கொள்கிறோம். அவ்வாறே கல்வி கற்று நல்லறிவு பெற்ற நீச குலத்தவரையும் மேன்மையான ஸ்தானத்தில் வைத்துக் கௌரவிக்க வேண்டும் 133

வருங்கால சந்ததியினருக்கு நிலையான ஒரு பொருளைத் தேடி வைக்க விரும்பும் ஒருவன், அதற்காக அவர்களுக்கு நல்ல கல்வி கற்க வசதி அளித்தாலே போதுமானது. பணத்தைச் சேர்த்து வைக்கத் தேவையில்லை. ஏனெனில் இருந்த இடத்தை விட்டுக் கல்வியை எவரும் எடுத்துச் செல்ல முடியாது. பிறருக்குக் கொடுத்தாலும் குறை

யாது. இச்சிறப்பு வாய்ந்த கல்வியைக் கோபங்கொண்ட அரசனும் பறித்துச் செல்ல முடியாதன்றோ! 134

படிப்புக்கு முடிவே கிடையாது. படிப்பவருடைய வாழ் நாளுக்கோ முடிவுண்டு. குறுகிய காலத்திலும் கற்க முடியாமல் அவனைப் பிணிகள் வாட்டுகின்றன. எனவே தண்ணீரிலிருந்து சாரமான பாலைப் பிரித்துண்ணும் அன்னப்பறவை போல், நூல்களின் தன்மை அறிந்து ஆராய்ந்து சாரமான நூல்களை மாத்திரம் தேர்ந்தெடுத்துக் கற்க மனிதன் முன் வரவேண்டும். 135

படகோட்டி கீழ் ஜாதிக்காரனானாலும் அதை மறந்து படகேறி அவன் உதவியால் நதியைக் கடப்பது போல் சாஸ்த்திரங்களைக் கற்று உணர்ந்தவன், கீழ் ஜாதியைச் சேர்ந்தவனானாலும் அவனை அணுகி சாஸ்த்திரங்களைக் கற்று அறிதல் சாலச் சிறந்ததாகும் 136

அறிவாளிகள், குற்றமற்ற பழமையான பல நூல்களின் சாரங்களை பலமுறை கேட்டு உணர்ந்தவர்கள். பகைமைக் குணம் இல்லாதவர்கள். கூர்மையான புத்தி உள்ளவர்கள். இப்படிப்பட்டவர்களுடைய கூட்டத்திலே சேர்ந்து பழகுவதால் உண்டாகும் ஆனந்தமே உண்மையான ஆனந்தம். தேவர் வாழும் அமராவதியைக் காண்பதினாலும் அவ்வானந்தத்தைப் பெற முடியாது. 137

சத்தமிடும் குளிர்ந்த கடற்கரைக்குச் சொந்தமானவனே! நுனியிலிருந்து தொடங்கி கரும்பைக் கடித்துண்ணும் பொழுது, முறையே இனிமை அதிகரித்துக் கொண்டே போவதுபோல்,உயர்ந்த நூல்களைக்கற்றுணர்ந்த நல்லோர்களுடன் செய்யும் நட்பு வளர்ந்து கொண்டே போகும். அடியிலிருந்து தொடங்கி கரும்பைக் கடித்துத் தின்னும்போது இனிமை குறைந்து கொண்டே வருவது போல், பண்பும் அன்பும் இல்லாத தீயவர்களுடன் கொள்ளும் நட்பு குறைந்து கொண்டே போகும். 138

புதிய பானையில் போட்ட ஒளிமிக்க பழமையான பாதிரிப் பூவின் சேர்க்கையால் பானைநீர் நறுமணம் பெறுவதைப் பார்க்கிறோம். அவ்வாறே படித்தவர்களின் சேர்க்கையால் படிக்காதவர்களும் முறையே நல்லறிவைப் பெறுவர் **139**

உலகில் எவ்வளவோ சாஸ்திரங்கள் உள்ளன. அவற்றுள் வேதாந்த சாஸ்திரத்தைப் படிக்காமல், தர்க்கம் போன்ற சாமான்ய சாஸ்திரங்களைப் படிப்பதினால் வீண் வாதம் செய்யும் திறனைப் பெறலாம். ஆனால் சம்சாரத் துயரைக் கடந்து கரையேற ஒரு நாளும் இதனால் முடியாது. **140**

## அதிகாரம 15 யர் குலத்தில் உதித்தல்

மிருக ராஜனாகிய சிங்கம் பசியால் வருந்திய பொழுதும் தரையில் படர்ந்த புல்லைத் தின்று பசியைத் தீர்த்துக் கொள்வதில்லை. அவ்வாறே நற்குடியில் பிறந்தவர்கள் கிழிந்த உடை அணிந்து பசியால் உடல் மெலிந்த நிலையை எய்திடினும், குலகௌரவத்தை விட்டுக் கொடுக்க மாட்டார்கள். **141**

ஆகாயம் வரை உயர்ந்து மேகங்கள் படர்ந்த மலையின் தலைவனே! நற்பண்பு, பெருமை, நன்னடத்தை, ஆகிய மூன்று குணங்களையும் புகழ்பெற்ற குலத்தில் உதித்தவர்களிடத்திலே தான் காண முடியும். மற்றவர்களிடம் செல்வம் ஏராளமாக இருக்கலாம். ஆனால் அவர்களிடம் இம் மூன்று குணங்களையும் காண்பதரிது. **142**

நல்லோரைப் பார்த்தவுடன் எழுந்து நின்று கொள்வது, உபசரித்து அவர்களை அழைத்து வருவது, சிறிது தூரம் உடன் சென்று அவர்களை விடை கொடுத்தனுப்புவது போன்ற நற்பண்புகள் நல்ல குலத்தில் பிறந்தவர்களிடம்

யல்பாய் அமையும். இப்படிபட்ட உத்தமர்களை கீழ்க் குலத்தில் உதித்தவர்களுடன் சமமாக வைத்துப் பேசுவது பொருத்தமன்று. 143

நற்குடியில் பிறந்தவர்கள், நற்காரியங்களைச் செய்தால் அது அவர்களின் இயல்பு எனக் கூறி மக்கள் மதிப்புக் கொடுப்பதில்லை. தகாத காரியங்களைச் செய்தாலோ மக்கள் அவர்களை ஏசுவார்கள். மட்டமான குலத்தில் பிறந்தவர்கள் விஷயத்திலோ நேர் மாருக மக்கள் பேசுவதைப் பார்க்கிறோம். எனவே நற்குடியில் பிறந்து நற்காரியங்களைச் செய்வதால் பயன் ஏதும் இல்லை, உழைப்புத் தான் மிச்சம். 144

மேற்குடியில் பிறந்தவர்கள், தாம் கல்லாமைக்காக மிக்க வருந்துவர். கீழ்த்தரமான காரியங்களைச் செய்ய மாட்டார்கள். பொய், கோள் சொல்லுதல் எங்கு தவிர்க்க முடியாமல் போய் விடுமோ என அஞ்சுவார்கள். யாசகர்களுக்கு ஒரு பொருளையேனும் கொடுக்க முடியாமல் போனுல் அதற்காக வருந்துவார்கள். புகழற்ற, தாழ்ந்த குலத்தில் தோன்றியவர்கள் கீழ்க் கூறிய செயலுக்கு பயப்படாதவர்களாய் உணர்ச்சியற்ற மரக்கட்டைக்குச் சமமாகக் கருதப்படுவார்கள். 145

முத்து, வைரம், ஒலி இவைகள் நிரம்பிய கடலின் குளிர்ந்த கரைக்கு உரியவனுன பாண்டியனே! நல்ல நட்பு, இனிய சொற்கள், யாசகர்களுக்கு தானம் செய்தல், உள்ளத் தூய்மை போன்ற நற்பண்புகள் மேல் குலத்தில் பிறந்தவர்களிடம் இயற்கையாய் அமைந்திருப்பதைக் காணலாம். 146

உருக் குலைந்து செல் பிடித்த பெரிய வீட்டிலேயும் மழைக்கு ஒழுகாத ஒருப்பகுதியாவது இருப்பது கண்கூடு. அதே போல் மேற் குலத்தில் உதித்தவர்களிடம் வறுமையிலும் கடமையை ஆற்றும் நற்குணம் காணப்படும். 147

உயர் குடிப் பிறந்தவர்கள் ஒரு புறம் வறுமையால் வாடிய பொழுதும் மற்றொரு புறம் பரோபகாரம் செய்யத் தவறுவதில்லை. கிரகண காலத்தில் சந்திரன், பாம்பி ஞல் மறைக்கப்பட்டாலும் மறைக்கப்படாத மற்றொரு பாகத்தால் ஒளி வீசி உலகைப் பிரகாசப் படுத்துவதைப் பார்க்கிறோம் அல்லவா? 148

நற்குடியில் பிறந்தவர்கள் வசதியின்றி வறுமையில் வாடும் பொழுதும் நற்காரியங்களைச் செய்யத் தவறுவதில்லை. ஏராளமான செல்வம் இருந்தாலும் கீழ்க்குடி மக்கள் நற் காரியங்களைச் செய்ய முன் வருவதில்லை. சேணம் முதலிய வற்றால் மானை, அலங்கரித்துப் போருக்குத் தயார் செய்ய லாம். ஆனால் துள்ளிக் குதித்தோடும் குதிரையைப் போல் மானால் போர்க்களத்தில் நின்று ஒருக்காலும் போர் புரிய முடியாது. 149

பெரிய நதி, வெள்ளம் வரும் பொழுது மக்களுக்கு தண்ணீர் அளித்து உதவுகிறது. நீர் வற்றிய பிறகும் தோண் டிய மணலிலிருந்து வேகமாய் ஊற்றெடுத்து வந்த நீரால் மக்களுக்கு உதவி புரிகிறது. அதே போல் உயர் குலத்தில் பிறந்தவர்கள் தம்மிடம் பொருள் உள்ள போது கொடுத்து உதவுவது போல் அது இல்லாத போதும் அடைக்கலம் வந்த வர்களுக்கு ஊன்று கோலாய்த் துணை நின்று உதவி செய்வர். 150

## அதிகாரம் 16 உயர்ந்தோர்

வானத்திலிருந்து நிலவைப் பரப்பி வெளி இருளை அகற் றும் சந்திரனுக்கும் அறிவால் உள்ளிருளைப் போக்கும் பெரி யோர்களுக்கும் பொதுப் படையாக இருளை அகற்றுவதிலே ஒற்றுமை இருக்கலாம். ஆனால் தன்னிடம் உள்ள களங் கத்தை (மாசை)ப் பொறுத்துக் கொண்டு வாளாயிருக்கிறான் சந்திரன். தனக்கு ஏற்பட்ட மாசைப் பெரியோர்கள் ஒருக்

காலும் பொறுத்துக் கொள்ள மாட்டார்கள். அதற்காக உயிரையே விட்டு விடுவர். இதுவே இவ்விருவருக்கும் உள்ள அடிப்படை வேறுபாடு. 151

எடுத்த காரியம் சுலபமாய் முடியலாம். அல்லது முடியாமலும் போகலாம். ஆனால் குற்றமற்ற பெரிய காரியத்தையே செய்ய எண்ணுவர் பெரியோர். அம்பைப் போட்டு' சிங்கத்தைக் கொல்லுவதற்காகச் செய்யும் முயற்சி தோற்றாலும், முயற்சி பெரியதாகையால் அதனால் பெரியோர் மகிழ்ச்சியை அடைவர். அதே அம்பு நரியின் உடலைப் பிளந்து முயற்சி பயனுடையதாகினும் அம் முயற்சியைச் சிறியதாக எண்ணிப் பெரியோர் இகழ்வர். 152

வின்றி உடல் நரம்பு புடைத்துக் காணும் அளவிற்கு வறுமை ஏற்படினும், மேலோர் வரம்பு மீறிய தவறுகளைச் செய்ய மாட்டார்கள். அறிவைச் சாதனமாகக் கொண்டு முயற்சி என்னும் கயிற்றினால் மனதைக் கட்டி, கையிலுள்ள செல்வத்திற்குத் தக்கபடி நற்காரியங்களையே அவர் செய்து வருவர். 153

மலை சூழ்ந்த நாட்டின் தலைவனே! தற்செயலாய்ச் செல்லும் இடத்தில் என்றாவது ஒரு நாள் சந்தித்த ஒருவனிடமும் வெகு நாட்கள் பழகியவனிடம் செலுத்தும் அன்பைச் செலுத்தி அவனை நண்பனாக்கிக் கொள்வர் நல்லோர். பல முறை நடந்து செல்வதால் முரடான மலையிலேயும் பாதை அமைந்து விடுகிறது அல்லவா? 154

இலக்கண முறை தவறிப் பயனற்ற சொல்லைப் பயன் படுத்தும் வம்பர் கூட்டத்திலே வாய்க்கு வந்தபடி ஏதாவது ஒன்றைப் பேசுவான் படிக்காத ஒருவன். நல்லோர் அதைக் கேட்டு மிக்க வருந்துவர். மறுகணமே "அறிவில்லாத இவனை நாம் உதாசினம் செய்வதைப் பார்த்து மற்றவரும் அவ்வாறே செய்வர்" என்று பரிதாபப்பட்டு அவனைத் திருப்தி

செய்வதற்காக அவன் சொல்வதையெல்லாம் பொறுமை யோடு கேட்பர் பெரியோர். 155

கரும்பை வாயால் கடித்தோ, கணுக்கள் நொறுங்கும்படி ஆலையில் போட்டு ஆட்டியோ, உலக்கையால் இடித்தோ எவ்வாறு ரசத்தை எடுத்தாலும் அந்த ரசம் இனிமையாகவே இருக்கும். அவ்வாறே தம் மேல் குற்றம் சொல்லி இடித்துப் பேசும் பிறரையும் உயர் குலத்தில் பிறந்தவர்கள் நடுநிலை வகித்து ஏசாமல் இனிமையாகவே பேசுவார்கள். 156

மாசில்லா அறிவைப் பெற்ற மேலோர்கள் திருட மாட் டார்கள், கள்குடிக்க மாட்டார்கள், சாஸ்திரங்களால் விலக்க பட்ட கெட்ட காரியங்களைச் செய்ய மாட்டார்கள். பிறரைப் பழிக்க மாட்டார்கள், மறந்தும் பொய் பேச மாட்டார்கள், வறுமையில் அகப்பட்டு வருந்திய பொழுதும் அதற்காகக் கவலைப்பட மாட்டார்கள். 157

நற் பண்புகளின் பெருமையை உணர்ந்து கொண்டு பிறருடைய ரகசியங்களைச் செவிடனைப் போல் கேட்காமலும் பிறர் மனைவியைக் குருடனைப் போல் பாராமலும் தலை மறை விலேயும் பிறரை ஊமை போல் பழிக்காமலும் ஒருவன் வாழ்ந்து வந்தால், அவனுக்கு யாரும் தர்ம உபதேசம் செய் யத் தேவையில்லை. 158

ஒருவன் நாள்தோறும் தன்னிடம் வந்து கொண்டிருந் தால் இவன் நம்மிடம் ஏதாவது ஒரு பொருளை விரும்புவான் என்று எண்ணி அவனைக் கேவலமாகப் பேசுவான் பண்பில் லாதவன். யாதாகிலும் ஒன்றை அடைய விரும்பித், தன்னி டம் வருபவனுடைய வருகையை வரவேற்று, பார்க்கும் பொழுதெல்லாம் அவனுக்கு உதவி புரிவர் மேற்குலத்தோர். 159

உயர் குடியில் பிறந்தவர்களின் சேர்க்கையால் எடுக்க, எடுக்கக்குறையாத சுரங்கத்தைப் பெற்ற பயனைப் பெறலாம். சிலர் இதை அறியாமல் பணக்காரன் என்ற ஒரே காரணத்தால் பிடிவாதமாக கீழ் மக்களுடன் சேர்ந்து ஒரு பயனையும் பெறுமல் வீணே வாழ் நாளைக் கழிக்கிறார்கள். 160

அதிகாரம்-17 பெரியோரைப் பழிக்காதிருத்தல்.

ஒலி செய்யும் நீர் அருவி நிரம்பிய மலைகளுக்கு ப் பிடமான நாட்டின் நாயகனே! நம்முடைய குற்றங்களைப் பெரியோர் எப்படியும் மன்னித்து விடுவர் என்ற நிலை வந்த போதும், மாசற்ற பெரியோர்களிடம் பிழை செய்யாது இருப்பது சாலச் சிறந்தது. ஒரு வேளை வெறுப்படைந்து குற்றத்தை அவர்கள் பொறுக்காமல் போனாலும்போகலாம். அப்பொழுது வரும் தீங்கை எவராலும் தடுக்க முடியாது. 161

பொன்னைக் காணிக்கையாக அளித்தாலும் சிலரோடு சிநேகம் ஏற்படுவது மிகக் கடினம். அவர்களே வலிய பலனைக் கருதாது உறவு கொள்ளத் தம்மிடம் வரும் பொழுது அதையும் பயன் படுத்திக் கொள்ளாமல் காலத்தை வீணாக்கிக் கொள்வர் மட்ட புத்தி உள்ள கீழ்க்குடி மக்கள். 162

மதிப்பு, அவமதிப்பு இரண்டிற்கும் சமநிலை கொடுத்து மேலோர் நடந்து கொள்வர். அதே சமயம் நற்பண்பும் நற்குணமும் இல்லாத கீழ் மக்கள் செய்யும் புகழ்ச்சியையோ, இகழ்ச்சியையோ ஒரு பொருளாகவே கருத மாட்டார்கள், அறிவு நூல்களைக் கற்ற பெரியோர்கள். 163

வயலின் வெடிப்பில் பதுங்கிக் கிடக்கும் படமெடுக்கும் ஒளி மிக்க பாம்பு, வெகு தூரத்திலிருந்து வரும் கொடிய இடியின் சத்தத்தைக் கேட்டு, பயப்படுவது இயல்பு. அதே

போல் நற்குணம் உள்ள பெரியோர்களின் சினத்திற்கு இலக்கான குற்றவாளி ஒருவன், பாதுகாப்பான இடத்தைத் தேடி ஒளிந்து கொண்டாலும் அவன் சினத்திலிருந்து தப்பிப் பிழைக்க மாட்டான். 164

நம்மிடமுள்ள நற்பண்புகளைப் பார்த்து நம்மை மேலோர்கள் பெரியவன் எனப் போற்றி பெருமைப் படுத்துவதுதான் உண்மையான பெருமை ஆகும். அதை விட்டு "எனது பெருமையை நீங்கள் அறிய மாட்டீர்கள். என் போன்ற ஒருவன் உலகில் இல்லை" என்று நம்மை நாமே பெருமைப் படுத்திக் கொள்வது உண்மையான பெருமையாகாது. 165

அகன்று குளிர்ந்த கடற்கரைக்குச் சொந்தமானவனே! காலை நேரத்தில் தோன்றும் நிழலைப் போல் கீழ்த்தரமானவர்களுடன் செய்து கொள்ளும் நட்பு, குறைந்து கொண்டே போகும். புகழ் பெற்ற பெரியோருடன் செய்து கொள்ளும் நட்பு, மாலை நேர நிழலைப் போல் சுருங்காமல் மேன்மேலும் வளர்ந்து கொண்டே போகும். 166

அரசர்களின் செல்வத்தையும், பெண்களின் அழகையும் அதற்குச் சமீபத்தில் இருப்பவர்கள் யாவரும் சுலபமாய் அனுபவிக்கலாம். வேறு தகுதி எதுவும் தேவையில்லை. நெருக்கம் ஒன்றுதான் தகுதி. துளிர் விட்டுக் குளிர்ந்த தாழ்ந்த மரங்களை அண்மையில் உள்ளவர்கள் அனைவரும் அணுகி பாகுபாடின்றி நிழலை அனுபவித்து இன்புறவில்லையா? 167

ஒரு பொழுதும் வற்றாத நீண்ட கடற்கரையின் தலைவனே! நன்கு ஆராய்ந்து பார்க்கும் அறிவில்லாத சாதாரண மனிதர்களுடன் பழகிவிட்டுப் பிரிந்தாலே அது வருத்தத்தை உண்டாக்குகிறது. எனவே கூடிப் பிரிவதைவிட யாருடனும் சேராதிருப்பதே சாலச் சிறந்தது. 168

சொல்லப் போனால் நல்ல பண்பாளர்கள் நல்ல நூல்களை தினமும் படித்துக் கொண்டு இருப்பார்கள். பெரியோரிடம் சென்று நல்ல விஷயங்களை எப்பொழுதும் கேட்டுத் தெரிந்து கொள்வார்கள். தம்மிடம் உள்ள பொருளைப் பிறருக்குக் கொடுத்து உதவுவார்கள். 169

அலட்டிக் கொள்ளாமல் அடக்கமாய் இருத்தல் பெரியோர்களுக்குப் பெருமையைப் பயக்க வல்லது. கல்வி, கலை ஏதாவது ஒன்றில் சிறந்து விளங்குகிறவர்களுக்கு மனம், மொழி, மெய்களால் அடங்கி இருத்தல் பெருமை தரவல்லது. தம்மை நாடி வருவோர்களின் துயரத்தைத் துடைக்கக் கூடிய தனவான்களே உண்மையான செல்வந்தராவர். 170

அதிகாரம்-18 பெரியோருடன் சேர்க்கை

கொளுத்தும் வெயில் பட்டவுடன் புல்லின் மேல் படிந்துள்ள பனி, தானாகவே விலகி விடும். இளமையில் தீயவர்களோடு சேர்ந்து செய்யும் பாவச் செயல்கள், நல்லோர்களுடைய சேர்க்கையால் தானாகவே விலகிப் போய்விடும். 171

தர்மவழி தெரிந்து கொள்ள வேண்டும். காலனைக் கண்டு அஞ்ச வேண்டும். பிறர் கூறும் கடினச் சொற்களை பொருட்படுத்தக் கூடாது. வஞ்சனைக் குணத்தை நம்மிடம் அண்ட விடக் கூடாது. தீயோருடன் நட்பை விலக்கிக் கொள்ள வேண்டும். நல்லோரின் நல்லுபதேசங்களைக் கேட்டுப் பயன் பெற வேண்டும். 172

உறவினரோடு பிரிவு, தீராப் பிணிகள், ஏனைய தீமைகள் யாவும் புவியில் பிறந்த மானிடர்களுக்கு ஒன்றுசேர வரக் கூடியவைகள். இப்பிறவி, இன்பம் தரவந்தது அன்று என்பதை நல்லோர்கள் நன்கறிவர். எனவே இப்பிறவித் துன்

பத்தை அறவே ஒழிக்க வல்ல நல்லோரையே என் மனம் என்றும் நாட வேண்டும். 173

ஆராய்ந்து பார்க்கின் பிறவி, துன்பமயமானது. எனினும் நல்லது செய்ய வேண்டும் என நல்லெண்ணம் உள்ளவர்களோடு எப்போதேனும் கலந்து வாழும் வாய்ப்பு ஒருவனுக்குக் கிட்டின், துன்பமயமான இப்பிறவியை எவனும் வெறுக்க மாட்டான். 174

ஊரிலுள்ள சாக்கடை நீர் பெருமை வாய்ந்த கடலுடன் சேர்ந்ததும், தன் முந்திய பெயரை மாற்றிக் கொண்டு புண்ணிய தீர்த்தமாகக் காட்சி தருகிறது. அப்படியே தாழ்ந்த குலத்தில் பிறந்தவர்கள், உயர் குடிப் பிறந்தோரு சேர்க்கையால் மலைபோல் பெருமையை அடைவர். 175

இயல்பாகப் பெருமைக் குணம் அற்றவர்களும், மலை போன்ற புகழ் உள்ளவர்களின் சேர்க்கையால் பெருமை பெற்று விடுகிறார்கள். வானளாவிய ஆகாயத்திலே கிரணங்களுடன் ஒளி மயமாய் விளங்கும் சந்திரனுடன் சேர்ந்திருக்கும் முயல் எனப்படும் களங்கத்தையும் சந்திரனோடு சேர்த்து மக்கள் வணங்குவதைப் பார்த்திருக்கிறோம் அல்லவா? 176

பாலுடன் கலந்த நீர் பாலாகவே மாறி விடும். கரு நிறம் கொண்ட நீரின் தன்மையைப் பிரித்து, அதில் காண முடியாது. மேலோர்களுடன் சேர்ந்த பிறகு சிறியோர்களுடைய நீச குணம் வேறுபட்டுக் காணப்படாமல் பெரியோர்களுடைய புகழிலே ஒன்றிக் கலந்து விடுகிறது. 177

வயலில் முளைத்த புல்லை, சுலபமாய்ப் பெயர்த்து எறிய வல்ல கலப்பை, மரக்கட்டையை அடைந்த புல்லைப்பெயர்க்க

முடியாமல் போய் விடுகிறது. அவ்வாறே வலிமை பெற்ற ஒருவனை அழிக்கவல்ல பகைவனின் கோபம், நல்லோரைச் சார்ந்த பொழுது ஒன்றும் செய்ய முடியாமல் பயனற்று விடுகிறது. 178

வளமான நஞ்சை நிலத்திலே உழுது பயிரிட்ட நெல், நன்கு பயிராவது போல் தாங்கள் பழகும் மக்களுடைய மேன்மையால் மனிதர்கள் உயர்வு பெறுவர். பேய்க் காற்றினால் தாக்கப்பட்ட கப்பல் கவிழ்ந்து விழுவது போல் தீயோருடைய சேர்க்கையால் மனிதருடைய நற்பெருமையும் நாசமாய் விடுகிறது. 179

மரத்தடியைப் பற்றிக் கொண்ட நெருப்பு, காடெல்லாம் பரவி ஒரு பாவமும் அறியாத மணம் மிக்க சந்தனம், வேங்கை போன்ற நல்ல மரங்களையும் எரித்து விடுகிறது அல்லவா? அதே போல் உள்ளத்தால் தூய்மை பெற்றவர்கள் சகவாச தோஷத்தால் இகழ்ச்சிக்குள்ளாகிறார்கள். 180

அதிகாரம்-19

மகிமை

கொடுக்கக் கையில் பணம் இல்லாமல் இளமையும் கழிந்து போய் விட்டால், முன்பு காதலித்த பெண்களே இப்பொழுது நினைத்துக் கூடப் பார்க்க மாட்டார்கள். அப்படிப்பட்ட நன்றி கெட்ட பெண்களுடன் சேர்ந்து வாழலாம் என்ற ஆசையை மனிதன் அறவே விட்டொழித்துத் துறவறம் மேற்கொள்வது சாலச்சிறந்தது. 181

இல்லறத்தில் இன்பத்தையும் நிறைவையும் பெற்றுள்ளோம் என்ற தப்பான எண்ணத்தால், வரவிருக்கும் துயரத்தையும் மூடர்கள் நினைத்துக்கூடப் பார்ப்பதில்லை. நிலையானவை போல் தோன்றி உண்மையில் நிலையற்ற இல்லற இன்பத்தின் தன்மையை உணர்ந்த அறிஞர்கள், அதைக் கண்டு ஒரு பொழுதும் வருந்தமாட்டார்கள். 182

கண்கூடாகப் பார்க்கும்பொழுதே உன் இளமை மறைந்து விடுகிறது. எதிர்பாராமல் பல இன்னல்கள் உன்னை வந்து அடைகின்றன. ஆகவே நல்லறிவு பெற்று நற் கதிக்குக் காரணமான நல்லறத்தை தயக்கமின்றி செய்து இன்பமாய் வாழுங்கள். 185

மழை பெய்து நீர் வருவாய் குறைந்த பொழுதும் தன்னி டமுள்ள ஊற்றுநீரை அளித்து வற்றிய குளம்,மக்களுக்கு உத வுகிறது. அவ்வாறே இயற்கையாய் தான குணம் படைத்த பெரியோர்கள் வறுமையிலும் சிறிதளவாவது பிறருக்கு உதவுவார்கள். கீழ்மக்கள் செல்வம் இருந்தும் உதவ முன் வருவதில்லை. 184

வெள்ளம் கரை புரண்டு ஓடும் பொழுது பலருக்குத் தானாகவே சென்று நீரை வழங்கி உதவி புரிந்த நதி, வற்றிய பொழுதும் ஊற்றெடுத்த நீரை அண்டி வரும் சிலருக்காவது அளித்து உதவும் தன்மை வாய்ந்தது. அதே போல் செல்வம் உள்ள பொழுது கேட்டவர்களுக்கெல்லாம் அள்ளி அள்ளிக் கொடுத்து உதவிய நல்லோர், வறுமையில் சிலருக்காவது உள்ளதைத் தந்து உதவுவர்.

185

பெருமை பொருந்திய நாட்டின் தலைவனான பாண்டியனே! வெள்ளை எருதின் மேல் சூடு போட்ட வடு தெளிவாகத் தெரிவது போல் பெரியோர்கள் செய்யும் சிறிதளவு தீய செயல், தெளிவாகக் காணப்படும். ஜீவ ஹிம்சை போன்ற பெரிய குற்றத்தைக் கீழ்மக்கள் செய்திடி னும் அது எவனுடைய கண்ணுக்கும் அகப்படுவதில்லை.

186

நற்பண்பு இன்றி, தீயகுணம் மாத்திரம் படைத்தவர் களுடன் செய்து கொள்ளும் நட்பு தீமையையே விளைவிக்கும். விளையாட்டில் கூடத் தீயவற்றைச் செய்யாத நல்லறிவாளர் களுடன் செய்து கொள்ளும் பகைகூட பெருமையையே அளிக்கும். 187

பொறுமைக் குணம் உள்ள நல்லோருடன் பொறுமையுடனும், ஆத்திரம் கொண்ட பகைவர்களுடன் காலனையும் கலங்க வைக்கும் கோபத்துடனும், எடுத்ததற்கெல்லாம் பொய் பேசுகிறவர்களுடன் பொய்யுடனும், பண்பு உள்ளவர்களிடம் பண்புடனும் ஒருவன் உறவாடப் பழகிக் கொள்ள வேண்டும். 188

சினங்கொண்ட சிலர் புறஞ்சொல்லி மனதை மாற்ற முயன்றாலும் மயக்கம் கொள்ளாமல் விளக்கின் ஒளி போல் மாறாத தெளிவுடன் இருப்பர், நல்ல உள்ளம் படைத்த பெரியோர். 189

தினந்தோறும் பெரியோர்கள் தாம் உண்ணும் உணவின் முதல் கவளத்தை விருந்தினருக்கு அளித்து, பிறகு தான் உண்பர். அவ்வாறு உண்ணும் உணவு, காமம் வெகுளி மயக்கம் ஆகிய மூன்று குற்றங்களையும் அகற்றி அவர்கள் நற்கதி பெறும்வரைத் துன்பங்களிலிருந்து நீக்கிக் காத்து வரும். 190

## அதிகாரம் —20 விடாமுயற்சி

நீர் நிரம்பாத குளத்தைச் சுற்றியுள்ள பயிர், நிலையான வளர்ச்சியை அடையாதது போல் பிறரை அண்டியிருக்கின்றவர்களுடைய வாழ்க்கையும் நிலையற்றதாக இருக்கும். கத்தியைக் கையிலேந்திச் சுழற்றும் பெண்ணுடைய கண்கள் தற்காப்பிற்காக நாற்புறமும் கவனமாய்ச் சுழன்று வருவது போல், விடாமுயற்சி உள்ள மனிதர்கள் நிலையான இன்பம் பெறுவர். 191

வழியிலுள்ள வஜ்ரம் பாயப் பெற்ற இளம் மரமும் யானையைக் கட்டுவதற்கு ஊன்றுகோலாய்ப் பயன்படுகிறது. அவ்வாறே தன் நிலையிலேயிருந்து சிறிதும் இறங்காமல்

முயற்சி செய்பவர்களுடைய வாழ்க்கை பயனுள்ளதாய் அமையும். 192

நல்ல மாமிசம் சமயத்தில் புசிக்கக் கிடைக்கப் பெருத வலிமையுள்ள புலி, மட்டமான தவளையைத் தின்று பசியைத் தீர்த்துக் கொள்கிறது. அவ்வாறே அறிவுக்கேற்ற நல்ல தொழில் கிடைக்காத பொழுது கிடைத்த தொழிலை ஏற்றுச் செய்தால் பிறகு ஒருவனுக்கு நல்ல தொழில் கிடைப்பது திண்ணம். 193

அலைகளால் மோதப் பெற்ற தாழம்பூவை உடைய குளிர்ந்த சோலை நிரம்பிய துறைமுகத்தின் தலைவனே! எளிதில் செய்ய முடியாத காரியத்தைச் செய்யத் தொடங்கி விடா முயற்சியோடு காரியம் முடியும்வரை தளர்ச்சியின்றி நிலைத்து நிற்பது ஆண்மைக்கு அடையாளம். எடுத்த காரியம் முயற்சியின்றி தானுக முடிந்து விடுமாகில் முயற்சி செய்யாத பெண்களும் உலகில் பெரும் புகழைப் பெற்று விடுவார்கள் அல்லவா? 194

உயர்ந்த குலம், தாழ்ந்த குலம் என்று பேசுவது எல்லாம் பெயர் அளவோடு சரி. இதற்குப் பொருள் ஒன்றும் இல்லை. செல்வம், தவம், கல்வி, முயற்சி இவைகளை வைத்துத் தான் குலத்தின் ஏற்றத் தாழ்வை முடிவு செய்ய வேண்டும். 195

எடுத்த காரியம் முடியும் வரை அதற்காகக் கைக் கொண்ட முயற்சியை மனதிலே அடக்கி வைத்து வெளியில் சொல்லாது இருப்பர். அத்துடன் பிறர் மன வலிமையை அங்கக் குறிப்பினுல் அறிந்து கொள்ளும் திறமை பெற்றவர் அறிவாளிகள். இவர்களுடைய குறிப்பிலேயே உலகம் யாவும் அடங்கி நிற்கும். 196

செல்லரித்து உளுத்துப் போன ஆலமரத்தை, அதில் தோன்றிய விழுதுகள் தாங்கும் தூணாய் நாற்புறமும் நின்று

அதைக் காப்பது போல், தந்தைக்குத் தளர்ச்சி ஏற்ப( போது, பெற்ற மகன் தந்தையை அழிவிலிருந்து காக்கிறுன். 197

யானையின்முகத்தைப் புண்படுத்தவல்ல கூர்மையான நகங்களையும் வலிமையான கால்களையும் கொண்ட சிங்கத்தை ஒத்த வல்லமை படைத்தவர்கள், செய்தொழில் குன்றி வருவாய் இன்றி மரணம் நேரும் தருவாயிலும் மானக் குறைவான சிறிய காரியத்தைச் செய்ய மாட்டார்கள். 198

இனிமையான கரும்பிலே பூத்து, சிங்கப் பிடரிபோல் அழகாய்க் காட்சி தரும் மலர், மணமின்மை என்ற காரணத்தால் பயனற்றதாய் விடுகிறது. அதே போல் கௌரவத்தை ஒருவனுல் சம்பாதித்து க்கொள்ள முடியவில்லையேல் அவன் நற்குடியில் பிறந்தும் பயன் இல்லை. 199

தனவான்கள் அன்போடு கறிகாயுடன் சேர்த்து அளித்த சோற்றை, சுய முயற்சியால் அதை அடையப்பெற முடியாத சோம்பேரிகள்தான் விரும்பி உண்பர். பிறரோ, கறிகாய் கலக்காத தண்ணீர் கலந்த வெட்டிச் சோருயினும், சுய முயற்சியால் கிடைக்கப் பெற்ருல் அதை அமுதத்துக்குச் சமமாக எண்ணி உண்பர். 200

## 2. நட்பியல்

அதிகாரம் 21 உறவினருடன் கூடியிருத்தல்

கருவைத் தாங்குவதாலும், குழந்தையைப் பெற்றெடுப்பதாலும் பெண்களுக்கு உள்ள துயரங்கள் யாவும் பிறந்த குழந்தையை மடியில் கண்ட மாத்திரத்தில் மறைந்து விடும். அதேபோல் தளர்ச்சியால் ஒருவனுக்கு வரும் துயரங்கள் யாவும், தனக்கு நன்மையையே விரும்பும் உறவினர்களைக் கண்டவுடன் பறந்து போய்விடும். 201

வெயிலில் வாடி வருந்தி வரும் யாவர்க்கும் நிழல் தந்து பாகுபாடின்றி தன்னை அண்டிய யாவர்க்கும் உதவி செய்யும் மாம்பழத்தை, பிறர்க்களிக்கும் மாமரம் போல் பிறருக்கு உதவி செய்து, தான் மட்டும் வறுமையில் வாடுகின்ற மானிடர்கள் மனிதர்களுள் உயர்ந்தவர் ஆவர். 202

அடுக்கடுக்காய்க் காய்த்துக் குலுங்கும் பெரிய காய்களை மெல்லிய மரக் கிளைகளால் என்றாவது தாங்க முடியாமல் போனது உண்டோ? அப்படியே தன் வறுமையிலேயும் வரும் உறவினர்களைக் காக்க மாட்டேன் என்று பெரியோர்கள் ஒருக்காலும் சொல்லமாட்டார்கள். அரசனே இதைக் கேளாய்! 203

குணம் இல்லாதவருடன் பலர் அறியச் செய்து கொள்ளும் நட்பு, நிலைத்து நிற்காது. குணசாலிகளுடன் ஒருநாள் கொள்ளும் நட்பு, கடமையைச் சரிவர ஆற்றி வரும் பெரியோர் நற்கதி பெற எடுத்துக் கொண்ட முயற்சி போல் நிலைத்து நிற்கும். 204

"இவன் இப்படிப்பட்டவன்", "இவன் எனது நண்பன், இவன் பகைவன்" எனப் பாகுபாடு பாராமல் துயரமுற்று வரும் அனைவருடைய துன்பத்தையும் தீர்க்க வல்லவர்கள் மக்களுள் சிறந்தவர்கள் என ஏற்றுக் கொள்ளப்படுவர். 205

தங்கக் கிண்ணத்தில் வைத்து சர்க்கரை கலந்து புலிநகம் போல் வெண்மையான அன்னியன் அளித்த சோற்றை விட, எந்தப் பாத்திரத்தில் வைத்தாவது நம்மவர் கையால் அளித்த உப்பில்லாக் கஞ்சியும் இனிமையைத் தரும். 206

பசி வந்த சமயத்தில் கறிகாய் கலந்து சுடச்சுட அளித்த மாற்றான் வீட்டு உணவும் வேப்பங்காய் போல் கசக்கும். பிற்பகல் அகாலமாய் உறவினர் வீட்டிலே கிடைக்கும் சாதாரண கீரைச் சோறுகூட அமிர்தத்துக்கு ஒப்பாகக் கருதப்படும். இதைக்கேளாய். 207

நாள்தோறும் சம்மட்டி போல் ஓய்வில்லாமல் பிறர் பொருளை அடித்துத் தின்று வாழ்பவர்கள், நெருப்பிலே பொருளை வைத்து விட்டு வெளியிலே வரும் குறடு போல் பிறர் துன்பப்படும் காலத்தில் அவர்களை விட்டு விலகி விடுவர். நெருப்பிலே புகுந்து பொருளைக் காய்ச்சி எடுக்கும் உலையாணி போல் துயரம் வரும் பொழுது உறவினர்கள், அவர்களுடன் நெருப்பிலே விழவும் சித்தமாய் இருப்பர். 208

மணமிக்க குளிர்ந்த பூமாலை அணிந்தவனே! வரும் இன்பத்தை உயிர் உள்ளவரை ஒற்றுமையாய் அனுபவிக்க முன்வருவது போல் துன்ப காலத்தில் ஒற்றுமையை உறவி னர்கள் பின்பற்றவில்லையேல் மறுபிறவியில் அவர்கள் கைம் மாறு என்ன செய்ய இருக்கிறது? இவ்வுலகை விட்டு உயிர் நீங்கிய பிறகு உறவே முறிந்து விடப்போகிறதே? 209

பூனைக்கண் போல் பளபளப்பாய், சூடாய்ப் பருப்புப் பாயசம் கலந்த உணவு, அன்பில்லாத மாற்றான் வீட்டில் கிட்டிடின் அது வேம்புபோல் கசப்புடையது. அன்போடு உறவினர் வீட்டில் கிட்டும் நீர்க் கஞ்சியும் அமிர்தம் போல் சுவை தரும். 210

## அதிகாரம்—22 ஆராய்ந்து நட்பு கொளல்

நுனியிலிருந்து தொடங்கி கரும்பைத் தின்னும் பொழுது முறையே இனிமை அதிகமாய் வருவது போல், விஷயமறிந்த கற்றவர்களுடன் செய்யும் நட்பு, இனிமையாய்ப் பெருகிக் கொண்டே போகும். அடி தொடங்கி கரும்பைத் தின்னும் பொழுது இனிமை குறைந்து வருவது போல் அரஸிகர் களுடன் கொண்ட நட்பு குறைந்து கொண்டே போகும். 211

நீர்வீழ்ச்சியில் கலந்து வரும் பொன்னைக் கண்டு பயந்து ஓடும் பறவைகள் நிரம்பிய நாட்டின் தலைவனே! நற்குடிப் பிறந்தவர்கள் குலத்திற்கேற்ற தங்களின் நற்குணங்களை மாற்றிக் கொள்வதில்லை. பெருமையை வெளிப்படுத்தும் செயலாக இதைக் கொள்ள வேண்டுமேயன்றி பிறர் உள்ளத்தை அறியவல்ல அறிகுறியாக இதைக் கொள்ள லாகாது. 212

யானையையொத்த குணம் கொண்டவருடன் நட்புக் கொள்ளலாகாது. நாயைப் போன்ற குணம் உள்ளவனுடன் நட்பு வைத்துக் கொள்வது நலம். ஏனெனில், வெகுநாள் பழகி, தனக்கு உணவளித்த பாகனையே யானை கொன்று விடுகிறது. தன் மேல் வேலை எறிந்து துன்புறுத்திய மனித னிடம் கூட வாலை ஆட்டி அன்பைச் செலுத்துகிறது நாய். 213

உடலால் என்றும் கூடி உள்ளத்தால் விலகி இருப்பவர் களுடன் சேர்ந்து பழகமாட்டார் பெரியோர். பல நாள் உடலால் பிரிந்து உள்ளத்தால் ஒத்திருப்பவர்களுடன் கூடிப் பழகுவர் பெரியோர். 214

மரக்கிளையில் பூத்த மலர் போல் முதலில் மலர்ந்து பிறகு சுருங்காது எப்பொழுதும் முகமலர்ச்சியுடன் காட்சி தருபவர்களுடைய நட்பு தார்மீகத் தன்மை வாய்ந்தது. நீரிலே பூத்த பூ போல் முதலில் முகம் மலர்ந்து பிறகு சுருங்கிக் கொள்பவர்களை விரும்பி எவரும் நட்பு வைத்துக் கொள்ளார். 215

ஒரு நாள் தொண்டு செய்யாவிடினும் கீழ்மக்களு டைய நட்பு பாக்கு மரம் போல் குறைந்து விடும். தென்னை மரம் போல் இடையிடையே சேவைக் குறைவு ஏற்பட்டாலும் நடுத்தரமானவர்களுடைய நட்பு குறை

யும். எவ்வித உபசரணையுமின்றி தானாக வளரும் பனை மரம் போல் உத்தமர்களுடைய உறவு வளர்ந்து கொண்டே போகும். 216

கழுநீரில் சமைத்த உள்ளன்போடு இட்ட கீரைச் சாப்பாடும் அமிர்தமாய் இருக்கும். கறிகாய்கள் நிரம்பிய, அன்பில்லாதவன் கையால் அளித்த வெள்ளை அரிசிச் சோறும் எட்டிக் காய் போல் கசக்கும். 217

நாயின் கால்விரல்களைப் போல் நெருங்கிப் பழகியும், ஈயின் காலளவாய் சிறிது கூட உதவாதவர்களின் நட்பினால் ஒருவிதப் பயனும் இல்லை. தானாக ஓடி நீரை அளித்துப் பயிர்களை வளரச் செய்யும் வாய்க்கால்களைப் போல் உதவுகிறவர்களுடைய நட்பை தேடிச் சென்றுவது கொள்ளல் சாலச் 218

அறிவில்லாதவனுடன் நட்புக் கொள்வதை விட, பகை கொள்வதால் பரவாயில்லை. தீராத வியாதியை விட மரணம் சிறந்தது. மனம் புண்பட ஒருவனைப் பழிப்பதை விட அவனைக் கொலை செய்வது மேலாகும். பொய்யாக ஒருவனைப் புகழ்வதை விட அவனைப் பழித்தாலும் பரவாயில்லை. 219

பலருடன் பல நாட்கள் கலந்து பழகி, குணப் பொருத்தம் பார்த்து நட்புக் கொள்ளல் நல்லது. கடித்து உயிரைக் குடிக்கும் பாம்புடன் பழகிய பிறகு அதைப் பிரிதலும் துன்பம் தரவல்லது. 220

## அதிகாரம்—23 நன்பனின பிழைப்பொறுத்தல்

நன்கு ஆராய்ந்து தெளிந்த பிறகு, நட்புக்கொண்டவனிடம் குற்றம் இருந்தால் அதை வெளிப் படுத்தாமல் மனதில் கொள்ள வேண்டும். நெல்லில் உமியும், நீரில்

நுரையும் பூவில் இதழும் அவைகளுக்கு இயல்பான குற்றங் களாக அமையவில்லையா?. 221

நீரை நம்பி வாழும் உழவர்கள், பலமுறை கரை உடைந்து வழி தவறிச் செல்லும் நீரைப் பொறுமையோடு தடுத்து நிறுத்தி வயலுக்குப் பயன்படுத்துவர். அவ்வாறே வெறுப்பு உண்டாகும் அளவுக்கு குற்றங்களைச் செய்தாலும் தாமாக விரும்பி நட்புக் கொண்டவர்களைப் பொறுமை யோடு பொறுத்துக் கொள்வர் நல்லவர். 222

வண்டுகள் ஒலிக்கும் கொங்கு மரங்கள் நிரம்பிய உயர்ந்த மலைகளால் சூழப்பட்ட நாட்டின் தலைவனே! நண்பன் செய்த தவறுகள் அனைத்தையும் பொறுத்துக் கொள்ளல் சிறந்த காரியமாகும். ஏனெனில் இருவருள் ஒருவன், மற்றவன் தவறைப் பொறுத்தால் தானே இருவரி டையே நட்பு தொடர முடியும். 223

கடலிலிருந்து அலைகள் கொணர்ந்த முத்துக்களை ஏற்றி வந்து கரையிலே இறக்கிய படகுகள் நிரம்பிய கடற்கரை யின் தலைவனே! விட்டுப் பிரிய முடியாதபடி கூடிப் பழகி விட்ட நண்பர்கள் தவறு செய்தால் அது மனதை எரிக்கும் நெருப்பாகவே ஆகிவிடும். 224

எத்தனை தீமைகளைச் செய்தாலும் ஒதுக்கித் தள்ள முடியாத நண்பரைப் பொன் போல் போற்றி ஆதரிக்க வேண்டும். ஏனெனில் பொன்னும் பொருளும் நிரம்பிய வீட்டை எரித்துச் சாம்பலாக்கும் நெருப்பைத் தேடிக் கொணர்ந்து வீட்டில் வைத்து தினந்தோறும் காப்பாற்ற வில்லையா? 225

வானளாவி உயர்ந்த மூங்கிலால் நிரம்பிய மலைக்குத் தலைவனே! ஒதுக்கித் தள்ள முடியாத நண்பன் செய்த தவறுகளை வைத்து, அவனைப் புறக் கணிப்பது தவறு. தன்

கண்ணைக் குத்திய குற்றத்திற்காகத் விரலையே வெட்டி விட முடியுமா? 226

நீர் நிரம்பிய குளிர்ந்த கடற்கரைக்கு உரியவனே! ஒருவனுடன் பழகிய பிறகு அவன் செய்த குற்றங்களைப் பண்புள்ளவர்கள் பொருட்படுத்த மாட்டார்கள். அதற்கு மாறாக அவன் செய்த குற்றங்களை வெளியில் எடுத்துரைக்கும் அறிவிலிகள், தீங்கு செய்தவர்களைப் போலவே தாழ்ந்தவர்களாகக் கருதப்படுவர். 227

ஒலியுடன் விழும் அருவிகள் நிரம்பிய நாட்டின் நாயகனே! நம் விதியை நினைத்துப் பார்க்கும் போது, பிறர் நமக்குச் செய்த தீவினைகளே மனதுக்கு வேதனை தர மாட்டாது என்றால், நண்பன் செய்த தவறுகள் எவ்வாறு மனதுக்கு வேதனையைத் தரும்? ஆராய்ந்து பார்த்தால் மனதுக்கு இனியதாகவே அது மாறிவிடும். 228

ஒருவனை நம்மவனாக முடிவு செய்து நேசித்த பிறகு அதற்கேற்ற பண்பு அவனிடம் இல்லாவிடினும், நம்மவனாகவே அவனை எண்ணி ஏற்றம் தர வேண்டும். அவனிடம் காணப்பட்ட பண்பின்மையை மனதிலேயே வைத்துக் கொள்வது நலம், 229

நட்புக் கொண்ட பிறகு அவனுடைய குணதோஷங்களை ஆராய்ப்புகும் நான், நண்பனுடைய ரகசியத்தைக் காவாமல் வெளிப்படுத்துகிறவனுக்குக் கிட்டும் பாவத்தையும் மக்களின் வெறுப்பையும் அடையக் கடவேன். 230

## அதிகாரம் - 24 பொருந்தா நட்பு

அருவி வாயிலாக வரும் நீரால் நிரம்பிய நாட்டின் பெருமானே! மழைக் காலத்தில் கூரை வீட்டிலே புகுந்த நீரை மண்ணைக் கட்டி வெளியேற்றியும், நீரைக் கையால்

வாங்கி வெளியிலே கொட்டியும், காரியம் முடியும் வரை சிலர் அவ்வீட்டிலேயே வசித்து வருவர். சில காரியவாதி கள் தாழ்ந்த நிலையில் வசித்ததாகத் தம்மைக் காட்டிக் கொள்வர். அவர்களுடைய நட்பு கொள்ளத் தக்கது அன்று. 231

நீர் அருவி நிரம்பிய நாட்டுக்கு நாயகனே! குணமுள்ள வருடன் செய்து கொள்ளும் நட்பு சிறப்புற்று மழை போல் பயனுள்ளதாய் விளங்கும். குணமில்லாதவருடைய நட்பு, வளருமாயின் அது மழையின்மை போல் பயனற்றதாய்ப் போய்விடும். 232

நுண்ணறிவாளருடன் சேர்ந்து அனுபவிக்கும் இன்பம், சொர்க்க லோக இன்பம் போல் சிறப்புடையதாய்க் கருதப் படும். சாஸ்திரம் பயிலாத பயனற்றவருடன் கூடிப் பழகல் நரகத்திற்கு ஒப்பாகும். 233

அருகிலெல்லாம் சந்தனச் சோலைகளும். சாலைகளும் நிரம்பிய நாட்டின் தலைவனே! அன்பில்லாதவருடைய நட்பு, முதலில் வளர்வது போல் தோன்றி பிறகு நெருப்பிலிட்ட வைக்கோல் போல் அடியோடு அழிந்து விடும். 234

செய்ய முடியாத காரியத்தைச் செய்ய முடியும் எனக் கூறல், முடிந்த காரியத்தைச் செய்யாமல் காலதாமதம் செய்தல், இவ்விரண்டும் இல்லற இன்பத்தை ஒதுக்கித் தள்ளி, துறவற நிலையைப் பற்றியுள்ளவர்களுக்கும் துயரத் தையே தர வல்லது. 235

ஒரே குளத்தில் தோன்றி வெகு நாட்கள் ஒன்றாக வளர்ந் தாலும் செங்கழுநீர் மலரின் பெருமையை வெள்ளாம்பல் ஒருக்காலும் பெறுவதில்லை. அதே போல் நற்குணமுள்ள வருடன் கலந்து பழகினாலும் குணமற்றவர்களுடைய செயல், தனிப்பட்டதாகவே காணப்படும். 236

எதிரே வரும் கிழக் குரங்குகளைத் தன் விரலால் தலையில் குட்டி அவைகளிடம் இருந்து பழங்களைப் பறித்துத் திரியும் பெண் குரங்குகள் கொண்ட நாட்டின் தலைவனே! மன ஒற்றுமை இல்லாதவனுடைய நட்பு இனிமையாய் இராது. 237

துயரத்தில் சிக்கித் தவிக்கும் நண்பர்களுக்கு, உயிரைக் கொடுத்தாவது நான் உதவத் தவறுவேனாகில், தன் வசமுள்ள நண்பன் மனைவியின் கற்பு பறிபோகும் பொழுது அதைக் காக்கத் தவறியவன் அடையும் பாவத்தை அடையக் கடவேன். 238

தேனடை நிரம்பிய மலையை உடையவனே! பசுநெய் நிரம்பிய பானையிலிருந்து அதை அகற்றி விட்டு அதில் வேப்ப எண்ணெயைக் கொட்டி நிரப்புவதும், நீதி அறிந்தவர்களுடைய நட்பை நழுவ விட்டு அறிவில்லாதவன் நட்பை ஏற்றுக் கொள்வதும் ஒன்றாகும். 239

சிறந்த குணம் உள்ளவனிடம் பிறருக்குக் கொடுத்து உதவும் தன்மை இல்லையேல் அது, தண்ணீர் கலந்த இனிய பால் போல் பயனற்றதாய்விடும். தீயவருடன் சேர்ந்த அறிவாளிகள், வெட்டை விரியனுடன் புணர்ந்து அழியும் நாகம் போல் அழிந்துவிடுவர். 240

# 3. இன்பவியல்

அதிகாரம்-25. அறிவுடைமை

அறிவாளிகள், தாழ்ந்த நிலையிலுள்ள பகைவனிடம் அனுதாபம் கொண்டு அவனைக் கொல்ல முன் வரமாட்டார்கள். வலிவுள்ள பாம்பு கூட நிறைவு பெறாத பிறைச் சந்திரனைக் கிரகணம் என்ற பெயரால் துன்புறுத்தவில்லை, 241

குளிர்ந்த பெருங் கடற்கரை காப்பானே! வறுமையில் வாடுகிறவர்களுக்குப் பொறுமை தான் அணிகலன். அடக்க மின்றி தான்தோன்றியாய்த் திரிகிறவர்களுடைய குல கௌரவத்தைப் பற்றி ஊரார் பழிப்பர். 242

நிலம் எதுவானுல் என்ன? எட்டி விதை போட்டால் எட்டி மரம் இன்றி அதிலிருந்து தென்னை மரம் முளைப்ப தில்லை. அதே போல் தென்னுட்டவரும் சுய முயற்சியால் நற்கதி பெறுகிருர்கள். நற்கதி பெருத வட நாட்டவரும் உலகில் உண்டு. திசை எதுவானுலும் என்ன? முயற்சி தான் வெற்றிக்குக் காரணம். 243

வேப்ப இலையின் நடுவில் பரவிப் பழுத்த வாழைப் பழ மும் தனது இயல்பான இனிமைக் குணத்தை மாற்றிக் கொள்வதில்லை. அவ்வாறே புனிதமான அறிவு படைத்த வர்கள், குணமற்றவாகளுடன் சேர்ந்தும் தம் மனத்தை மாற்றிக் கொள்வதில்லை. 244

அலைகடலின் குளிர்ந்த கரைக்குத் தலைவனே! உப்பு நீர் நிரம்பிய கடலுக்கு அருகாமையிலுள்ள பூமியிலும் இனிமை யான நீர் கிடைக்கிறது. இனிய அருவி நிரம்பிய மலைக்கு அருகாமையிலுள்ள இடத்திலும் உப்புத் தண்ணீர் கிடைக் கிறது. எனவே மக்களுடைய குணம், செயல் இவைகள் இடத்தை அடிப்படையாகக் கொள்வதில்லை. அவரவர் மனே நிலையையே அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. 245

கதம்ப மணம் நிரம்பிய குளிர்ந்த கடற்கரைக்குத் தலைவனே! குணம் உள்ளவனுடன் முதலில் உறவு கொண்டு பிறகு பிரிவதை உறுதியான அறிவு பெற்றவர்கள் விரும்ப மாட்டார்கள். கூடிப் பிரிவதைவிட கூடாமல் இருப்பது சாலச் சிறந்தது. 246

ஆராய்ச்சி மூலம் பகுத்தறிவு படைத்தவர்களுடைய சேர்க்கையால் பல இன்பங்கள் கிடைக்கின்றன. பகுத்தறிவு பெற முடியாதவர்களை அண்டாதவர்கள், துன்பங்களை ஒரு பொழுதும் அடையமாட்டார்கள். 247

உயர்ந்த நிலையை தான் அடைவதற்கும் தாழ்ந்த நிலையில் தன்னைக் கொண்டு செல்வதற்கும், மேன்மேலும் உயர்வு பெறுவதற்கும்,எல்லோருள்ளும் முக்கியமாய் விளங்கு வதற்கும் தன் முயற்சியே மூல காரணமாய் அமையும். 248

உயர்ந்த அலைகள் வீசும் கடற்கரைச்கு உரியவனே! பல காரியம் வெற்றி பெற விரும்பி, மூடர்களைத் தொடர்ந்து செல்வது, அவிவேகம் அன்று; விவேகமாகவே இதைக் கருத வேண்டும். 249

அறம் பொருள்களுக்குக் காரணமான செயல்களைச் செய்தல், அதனுல் இன்பம் அடைதல், தக்கவர்களுக்கு தானம் செய்தல் என்ற இம்மூன்றும் சேர்ந்து ஒருவனுக்கு இப்பிறவியில் கிட்டிடின், அப்பிறவி, வெளிநாடு சென்று வெற்றியோடு திரும்பிக் கரையைச் சேர்ந்த கப்பலைப்போல் பயனுள்ளதாகும். 250

## அதிகாரம் – 26 விவேகமின்மை

மனிதனுக்குப் பகுத்தறிவு சிறந்த பாக்கியமாகும். பகுத்தறிவு இன்மையை வறுமைக்கு ஒப்பாகக் கருத வேண்டும். பெண்மை மிகுந்த, ஆண்மை குறைந்த பேடியானவள் கண் கவர் ஆபரணங்களை அணிந்தாலும் பெண்களுக்கு உரிய அழகை ஒருக்காலும் பெற மாட்டாள். 251

பல விஷயங்களைக் கற்றும் கேட்டும் உணர்ந்த ஞானிகள், பெருமையை இழந்து வறுமைக்கு உள்ளாகிறுர்கள்

;க் காரணம் யாதெனக் கேட்கலாம். சிறப்புடைய ஸரஸ்வதி தேவி அறிஞர்களிடம் குடி கொண்டு இருக்கிறாள். அவளுடன் சேர்ந்து வாழ விரும்பாத இலக்குமி தேவி கோபம் கொண்டு அவர்களை அண்டாது வெறுத்து விலகி விடுகிறாள். இதுதான் இதற்குரிய விடை. மருமகளும் மாமியாரும் சேர்ந்து ஒற்றுமையாய் எங்கேயாவது வாழ்வது கேட்டு இருக்கிறீர்களா? 252

"இளமையில் கல்" என்று சொல்லும் தந்தை சொல்லை மதியாது நடப்பவன், ஒரு நாள் பலர் முன்னிலையில் கொடுத்த எழுத்தோலையைப் படிக்க முடியாமல் திணறிக் கோபம் கொண்டு அவர்களைத் தடிகொண்டு தாக்க வருவான். 253

கல்லாதவன் கற்றறிந்தவர் உள்ள அவையில் வந்து மௌனமாக இருந்தால் அது அசுத்தமான நாய் சபைக்குள் நுழைந்ததை ஒத்திருக்கும். ஏதாவது ஒன்றை அவன் பேசத் தொடங்கினுல் அது நாய் குரைப்பதை ஒத்திருக்கும். 254

)லக்கணப் பிழையின்றிப் பேசத் தெரியாதவர் கூடிய மட்டமான சபையில், கல்லாதவன் புகுந்து தைரியமாய் அறியாத விஷயங்களையெல்லாம் பேச முயல்வான். கற்றவர்களோவெனில், அங்கு பலர் வேண்டிக் கொண்டாலும் அறிந்த விஷயங்களையும் கேட்பவர்களின் தகுதியின்மையை உணர்ந்து சொல்ல மாட்டார்கள். 255

கற்றறிந்த அறிவாளிகள் சொற்பிழைக்கு அஞ்சி அதிகமாய் எதையும் பேசமாட்டார்கள். கல்லாதவர்கள் எதற்கும் அஞ்சாமல் தோன்றியவற்றையெல்லாம் சொல்வர். உலர்ந்து காய்ந்த பனை ஓலையில் உண்டாகும் ஒலியை பச்சைப் பனை ஓலையில் பார்க்க முடியாது அல்லவா? 256

நன்மை தெரியாதவர்களுக்கு தர்ம உபதேசம் செய்வது, ரஸம் அறியாத பன்றிக்கு மாம்பழ ரஸம் கலந்த உணவை அளிப்பதற்கு ஒப்பாகும். கல்லிலே துளை செய்து நிறுத்தினாலும் நிலைத்து நில்லாத மரக்கிளையைப் போல் நாம் செய்யும் உபதேசமும் அவர்கள் செவிக்குள் நுழைந்து நிற்காது. 257

பாலால் பல முறை கழுவி உலர்த்தி எடுத்தாலும் கரியின் கருநிறம் மாறுவதில்லை. அவ்வாறே தடியால் அடித்தடித்துக் கல்வி புகட்டினாலும் பூர்வ புண்ணியம் இல்லாதவன் அறிவு பெறமாட்டான். 258

தேன் சுரக்கும் நறுமணம் மிக்க பூவைப் புறக்கணித்து ீனமான பொருளை விரும்பிச் செல்லும் ஈ போல் மட்டமானவற்றைப் பெற விரும்பும் மனம் உள்ள மனிதன், தேனினும் இனிய நல்லோருடைய உபதேச மொழிகளைக் கேட்க முன் வர மாட்டான். 259

படித்தவர்கள் தாம் கற்று உணர்ந்து கூறிய நுண் பொருள்களைக் கேட்க பலர் விரும்பம் காட்டாததின் பயனாகத்தான் மூடர்கள் தம்மைப் போன்ற மூடர்களைப் பார்த்து இழிவான பிரசங்கம் செய்ய முன்வருகிறார்கள். 260

## அதிகாரம்—27 பயனற்ற செல்வம்

பழுத்த பழங்கள் பல அருகில் இருந்தும் விளாம் பழத்தை வௌவால் அணுகாதது போல் சமீபத்தில் இருந்தாலும் பெருந்தன்மை இல்லாதவனுடைய செல்வம் தமக்குக் கிட்டாது என எண்ணி, நல்லோர் அணுகமாட்டார்கள். 261

கள்ளிப்பூ, கைநீட்டி எளிதில் பறிக்கும்படி அருகாமையில் இருந்தாலும் அது தலையில் சூட்டத்தகுதி பெறாததால் கள்ளிச் செடியை மக்கள் தொட விரும்பாதது போல் செல்வம் இருந்தும் கீழ்மக்களை அறிஞர்கள் கூடிப்பழக மாட்டார்கள். 262

அலைகடல் அருகில் அமர்ந்திருப்பவர்களும், உப்பு )ல்லாத இனிய நீர் நிரம்பிய கிணற்றைத் தேடி வெகு தூரம் செல்வது போல், அற்ப குணம் படைத்த சீமான்கள் அருகில் இருப்பினும் நல்லோருடைய செல்வத்தை வெகு தூரம் நடந்து சென்றுவது பெற முயல்வர் நல்லோர். 263

நல்லறிவாளர்கள், செல்வம் இன்றி வறுமையால் வாடுகிறார்கள். அறிவில்லாத கீழ்மக்கள் பட்டுப் பீதாம்பரமும் உடுத்தி சீமான்களாய்க் காட்சி தருகிறார்கள். எனவே இவ்வுலகில் புண்ணியப் பயன்தான் இவ்வேறுபாட்டிற்கு முக்கிய காரணம். 264

வேல் போன்ற கண்ணை உடையவளே! நற்குணம் உள்ள அறிவாளிகள் ஏழைகளாய் இருப்பதற்கும் குணமற்ற முட்டாள்கள் செல்வம் நிறைந்திருப்பதற்கும் முற்பிறவியில் அவரவர் செய்த புண்ணியத்தைத் தவிர வேறு எதைக் காரணமாகக் கூற முடியும்? 265

தாமரை மலர் மேல் வீற்றிருக்கும் தங்கப் பதுமையே! நீ ஏன் குணம் உள்ள மனிதர்களைப் புறக்கணித்து குணமில்லாதவர்களைப் போய்ச் சேருகிறாய்? எனவே நீ சாம்பலாகக் கடவாய். 266

வேல்போல் கூர்மையான கண்ணை உடையவளே! உதவி புரிகிறவர்களிடம் வறுமை வெட்கமின்றி இருக்கிறது. உதவாதவர்களிடம் செவ்வம் வஜ்ரம் போல் ஒட்டிக் கொள்

கிறது. வறுமையும், செல்வமும் பொருந்தாத இடங்களில் இருப்பதை நீயே வியப்புடன் காண்பாய். 267

வெட்கம் உள்ள நல்லோர், வறுமையால் வெகு தூரம் நடந்து சென்று பிச்சை எடுத்துக் கிடைத்த உணவை உண்பர், வெட்கம் கெட்ட தீயோர், செல்வம் தழைத்து தன் வீட்டுக்குள்ளே அமர்ந்து பாலாறு, மோராறு பெருகக் கறிகாயுடன் தனித்து கதவைத் தாளிட்டுக் கொண்டு உண்பர். 268

கதிருடன் கூடிய நெற்பயிர் வாடி வதங்கும் பொழுது மின்னலுடன் கூடிய மேகம் பயன் இன்றிக் கடலில் மழை பொழிவது போல் அறிவிலிகள், தமக்குக் கிடைத்த ஏராள மான செல்வத்தைப் பயன் இன்றி, தேவையற்ற ஒரு வனுக்குக் கொடுத்து வீணடிப்பர். 269

விவேகமற்றவன் கற்றும் கல்லாமைக்கு ஒப்பாகும். விவேகமுள்ளவன் கல்லாவிடினும் கற்றதற்கு ஒப்பாகும். யாசிக்கும் குணம் இல்லாதவனுக்கு வறுமையே செல்வத் திற்குச் சமமாகும். தானம் செய்து அறியாத தனவான் ஏழைக்கு ஒப்பாவான். 270

## 4. துன்பவியல்

அதிகாரம் 28. கொடாமை

பாகுபாடு இன்றி அனைவருக்கும் நிலைமைக்கு ஏற்ப சமைத்த சோற்றைப் பகிர்ந்து கொடுத்து, தானும் உண்பது தான் உண்மையான உணவு ஆகும். வீட்டைத் தாளிட்டுத் தனித்திருந்து உண்ணும் பயனற்ற மனிதனுக்கு சொர்க்க லோகக் கதவு, நிலையாய் என்றும் அவன் உள்ளே செல்ல முடியாமல் மூடிக் கிடக்கும். 271

எப்படியும் தகுதிக் கேற்ப, சிறிதளவு ஆயினும் அறம் செய்பவர்கள் புகழைப் பெறுவர். செல்வம் கிடைத்த பிறகு தானம் செய்யலாம் எனச் சொல்லுகிறவர்கள் மக்களின் பழிக்கு உள்ளாவார்கள். 272

ஈட்டிய பொருளைத் தானும் அனுபவிக்காமல் துறவி களுக்கும் அளிக்காமல் சேர்த்து வைத்து இறந்து போகும் மூடனை கஞ்சனைப் பார்த்து, அவன் சேர்த்து வைத்த பொருளே சிரிக்கும் அத்துடன் கருணைக் குணமும் கண்டு நகைக்கும். 273

பிறருக்குக் கொடுக்காமல் தானும் உண்ணாமல் சேர்த்து வைத்த லோபியின் செல்வத்தை, நற்குடியில் பிறந்து மணமாகாமல் காத்திருக்கும் அழகிய கன்னிகையைப் போல் காலம் வரும் போது தெரியாத எவனோ ஒருவன் வந்து அனுபவிப்பது திண்ணம். 274

அலைவீசும் நீர் நிரம்பிய பெரிய கடல், அருகில் இருந்தும் விட்டு விட்டு நீர் சுரக்கும் கிணற்றில் உள்ள ஊற்று நீரை மக்கள் அதிகம் விரும்புவது போல், புண்ணியத் தின் பெருமையை அறியாதோர் ஈட்டிய பெரும் செல்வத் தை விட, நற்குணம் உள்ள பெரியோரின் தீரா வறுமையைப் பெரியதாக எண்ணுவர் சிலர். 275

என்னுடையது என்று சொல்லிக் கொண்டு லோபி செலவழிக்காமல் தேடி வைத்த செல்வத்தை ஏழையாகிய நானும் அதை என்னுடையது என்று தைரியமாகச் சொல்லுவேன். ஏனெனில் அச் செல்வம் அவனுடைய தாகில் பிறருக்குக் கொடுத்து தானும் அதை அனுபவித்து இருப்பான் லோபி. அதைத்தான் அவன் செய்யவில்லை. இருந்தால் நான் கொடுப்பேன். அனுபவிக்கவும் செய்வேன். எனவே இவ்வாறு சொல்வதில் தவறென்ன? 276

கொடுக்காத கஞ்சப் பிரபுவிற்குப் போல் ஏழைக்கு ஒரு வித பயமும் கிடையாது. ஏனெனில் செல்வத்தை இழந்து விடுவோம் என்ற கவலேயோ, அதை பூமியில் புதைக்க வேண்டிய அவசியமோ, அதை அதிகம் செல விடாமல் இழுத்துப் பிடிக்க வேண்டிய நிலேயோ, இப்படி ஒருவித வருத்தமும் ஏழைக்கு ஏற்படுவதில்லே. 277

பணம் உள்ளவனுக்குக் கொடுக்க ஏன் மனம் வருவதில்லே. முறைப்படி இவனுடைய பணத்தைப் பெற்ற பங்காளிக்கும் கொடுப்பதிலே நாட்டம் இல்லே. பணக்காரன் கொடுக்க முன் வந்திருந்தால் பங்காளிகள் அதைத் தடுத்து நிறுத்தப் போவதில்லே. பங்காளி பணக்காரன் வாரிசாகக் கொடுத்தால் இறந்து போனவன் வந்து அதைத் தடுக்கப் போவதில்லே. சில குடும்பங்களில் யாருக்குமே தான புத்தி வருவதில்லே. 278

கொடையாளி பசுவின் நிலேயிலிருந்து, யாசகராகிய கன்றுக்குட்டிக்குக் களிப்போடு அளிக்கும் உதவி தான் உண்மையான உதவியாகும். அடித்து உதைத்து பலாத்காரமாகப் பசுவைக் கறப்பது போல் பல உபாயங்களால் கொடையாளியிடமிருந்து உதவி பெறுவது கீழ்த்தரமானது. 279

செல்வத்தைத் தேடுவதிலே துயரம் உண்டு. அதை காப்பதிலேயும் துயரமுண்டு. அது அழியும் போதும் துயரம் வரும். அதைக் காப்பதிலே கவனக் குறைவு ஏற்படின் அதற்காகவும் வருந்த வேண்டும். எனவே எல்லா வகையிலும் செல்வம் துயரத்தைத் தரவல்லது. 280

## அதிகாரம் 29 ஏதுமின்மை

காவி படிந்து காஷாயம் கட்டிய துறவிகளிடம் ஏதாவது சிறிதளவு பொருள் இருந்து விட்டால், மக்களிடையே அவர்களுக்குச் செல்வாக்குப் பெருகி வருகிறது. உயர் குலத்தில்

பிறந்து ஏழ்மையில் வாழ்கிறவர்கள் செத்த பிணத்தை விடக் கேவலமாகக் கருதப் படுவர். 281

நீரைவிட நெய் நுட்பமானது. நெய்யை விட புகை மிக நுட்பமானது. நுட்பத்திலும் நுட்பமான புகை கூடப் புக முடியாத சந்தில் யாசகர்கள் சுலபமாகப் புகுந்து விடுவர். 282

கல்லால் கிளிகளை ஓட்டுவதற்கு இடமான கானகத்துடன் கூடிய நாட்டின் நாயகனே! உயர்ந்த கற்களால் உயர்ந்து நிற்கும் மலை மேல் மலராத காந்தள் மலரை சிவந்த புள்ளிகள் நிரம்பிய வண்டுகள் வந்தடைவதில்லை. அவ்வாறே பணம் இல்லாதவனை உறவினர்கள் ஒருகாலும் வந்து சேர்வதில்லை. 283

காக்கை சவத்தைக் கொத்தித் தின்பதற்கு நாற்புறமும் வந்து மொய்த்துக் கொள்வது போல், பணமுள்ள ஒருவனை ஆயிரம் பேர் பணிவோடு வந்து சூழ்ந்து கொள்வர். பணத்தைப் பறி கொடுத்து ஒரு நாள் சோற்றுக்காகத் திரியும் அவனையே, 'நலமா?' என்று கேட்க ஒருவனும் முன் வர மாட்டான். 284

அருவிகள் கீழே விழுந்து அதனால் அழுக்கு நீங்கித் தூய்மை பெற்ற மலைகளுடன் கூடிய நாட்டின் நாயகனே! ஒருவனுக்கு செல்வம் இல்லையேல் அவனுடைய குலப் பெருமையும் அழிந்து விடும். ஆண்மை குணமும் சோபிக்காது. கல்வித் திறனும் மங்கிப் போகும். 285

பசியோடு தன்னைத் தேடி வருபவர்களுக்கு ஊரில் இருந்து கொண்டே ஒரு வித உதவியும் செய்யாதவர்கள் அங்கு வசிக்காமல் மற்றொரு ஊர் சென்று பிச்சை எடுத்து உண்டு பிழைப்பதே நன்று. 286

முல்லை போன்ற கூர்மையான பற்களை உடையவளே! வறுமை என்னும் துன்பத்தில் அகப்பட்டவர்களுடைய

நற்குணம், கூர்மையான அறிவு, மற்ற எல்லா விதமான சிறப்புத் தன்மைகளும் அழிந்து விடுகின்றன. 287

வறுமை நிலையில் உதவி கோரி வருபவருக்கு ஒரு வித உதவியும் செய்யாமல், தன்னைக் காத்துக் கொள்வதிலே கருத்துக் கொண்டு ஊர் நடுவே வாழ்வதை விட, வெகு தூரம் சென்று பல வீட்டு வாயிலில் கையேந்தி பிச்சை எடுத்து வாழ்க்கை நடத்துவது சிறந்ததாகும். 288

பொருள் எல்லாம் அழிந்த பிறகு, வளை அணிந்த கைகளால் கீரையைப் பறித்துச் சமைத்து இரண்டு கைகளாலும் அதை ஏந்தி உப்பின்றி, புசித்துக் களிப்பின்றி காலம் )ப்பர் சிலர். 289

நீர் அருவி பாய்ந்து உயர்ந்த குளிர்ந்த மலை சூழ் நாட்டின் நாயகனே! புள்ளிகள் நிரம்பப் பெற்ற உடலுடன் கூடிய அழகிய வண்டுகள் பூக்காத மரக்கிளைகளை வந்தடைவதில்லை. அவ்வாறே பணம் இல்லாதவனை உறவினர் கண் எடுத்தும் பாரார். 290

அதிகாரம் 30 மானம்

குணம் இல்லாதவர்கள் செல்வச் செருக்கினால் செய்யும் வரம்பு கடந்த தீய நடத்தைகளைக் கண்டு மானம் உள்ளவரின் உள்ளம், தீப்பற்றி எரிகிற காட்டுத் தீயின் அனலைப் போல் கொதித்து எழும். 291

வறுமையால் எலும்புக் கூடாய் உடல் உலர்ந்து போனாலும் மானம் உள்ளவன் தன் துயரத்தை குணம் கெட்டவனிடம் எடுத்துச் சொல்ல மாட்டான். முன்னமே ஊகித்துத் துயரை உணர்ந்து உதவுகிற அறிவாளிகளிடம் தானாகவே தன் வருத்தத்தைச் சொல்லிக் கொள்ள முன் வருவான் மானி. 292

ஏழையாகிய நாம் விருந்தாளிகளை நம் வீட்டிற்குள் அழைத்துச் சென்று மரியாதை அளிக்கிறோம். பணக்காரர்கள் ஏழையாகிய நம்மை வீட்டிற்குள் அழைத்துச் சென்றால் வீடு பாழடைந்து விடும் எனக்கருதி வாயிலிலேயே நிறுத்தி அன்னம் இடுகிறார்கள். எனவே செல்வந்தருடன் நட்பை விலக்கிக் கொள். 293

கஸ்தூரி மணம் கமழும் கூந்தலை உடையவளே! மானம் உள்ளவர்களின் பெருமை இவ்வுலகில் பெருகுவதோடு பெரியோர் சென்ற வழியைப் பின்பற்றி அதன் மூலம் புண்ணிய பலனைத் தருவதால் அது மறுமைக்கும் அடிகோலுகிறது. இதை அறிந்து கொள். 294

மறுமையில் பாவத்தையும், இம்மையில் பழியையும் தரவல்ல தீய செயலை உயிருக்கு ஆபத்து வரும் வேளையிலும் நல்லோர் செய்ய மாட்டார். ஒரு நாள் ஒரு நொடிப் பொழுதில் தீர்ந்து விடக் கூடியது மரணத் துயரம். பழிச் சொல்லால் வரும் துயரத்தை வாழ் நாள் முழுவதும் அனுபவித்து ஆக வேண்டும். எனவே அழியாத் துயரத்தைத் தரவல்ல செயலை எவன் தான் செய்வான்? 295

)வ்வுலகிலுள்ள மானிடருள் செல்வம் இருந்தும் தானம் செய்யாதவர் ஏழைகளாகவே கருதப்படுவர். வறுமையிலும் பணக்காரரிடம் சென்று கை நீட்டாதவர் பிரபுவாகவே மதிக்கப்படுவர். 296

வில் போன்ற புருவமும், வேல் போன்ற கண்களையும் உடையவளே! கீழ்மக்கள் பசிக் கொடுமையைக் கண்டு அஞ்சுவர். நடுத்தர மக்கள் துயரத்தைக் கண்டு பயப்படுவர். பழிச் சொல்லைக் கேட்டு அஞ்சுவர் உயர்ந்தவர். 297

இவன் நற்குணம் உடையவன். கருணை உள்ளம் படைத்தவன், ஏழை என்று சொல்லி செல்வந்தர் அலட்சியமாய்ப் பார்க்கும் போது பெரியோர்களுடைய மனம் கொல்லன்

பட்டறையில் கொழுந்து விட்டெரியும் நெருப்பு போல் கொதிக்கும். 298

நம்மை நாடி வந்தவர்களுக்கு உதவி செய்யாதிருப்பது வெட்கமாகாது. பயப்பட வேண்டிய சமயத்தில் வெட்கம் காட்டுவதும் உண்மையான வெட்கம் ஆகாது. தாழ்ந்த நிலையில் இருக்கும் போது தனக்கு செல்வந்தர் செய்த உதவியை வெளியில் சொல்லாமல் மறைப்பது தான் உண்மையான வெட்கமாகும். 299

காட்டில் தான் கொன்று வீழ்த்திய பிராணி தவ, தனது இடது பக்கத்தில் வீழ்ந்து விட்டால் பசி உள்ள புலி உயிர் போகும் நிலையிலும் அதை எடுத்து உண்ணுது அதே போல் மானக் குறைவோடு கிடைத்த சிறந்த சொர்க்க லோக இன்பத்தையும் பெரியோர் விரும்ப மாட்டார். 300

## அதிகாரம் 31 யாசிக்கப் பயப்ப

"ஏழையான இவன் பணக்காரனுக ஆவதற்கு நான் தான் காரணம். சுய முயற்சியால் பணம் சேர்க்க இவன் தகுதியற்றவன்" என்று எண்ணிச் சொல்லி, தம்மைத் தாமே பெரியவனுக நினைக்கின்றவரின் பின்னுல் அறிவாளிகள் பொருள் கோரிச் செல்ல மாட்டார்கள். 301

இழிவான தொழில் செய்து வயிற்றை நிரப்பிக் கொள் வதை விட அத்தொழிலைச் செய்யாமல் இறப்பது மேல். ஏனெனில் கண்மூடித் திறப்பதற்குள் இறந்த மனிதன் மறு பிறவி எடுத்து இழந்த உடலைப் பெற்று விடப் போகிருன். அதற்காகக் கிடைக்காத மானத்தை இழப்பானேன்? 302

ஏழ்மை வரும்போது ஒருவாறு முடிவு செய்து இழிவான யாசகத் தொழிலில் இறங்காமல் இருக்கமுடியாது. எனினும் அணைத்துக் கொண்டு வீட்டுக்கு உண்ண வாருங்கள் என்று

அழைப்பவனுடைய வீட்டிற்கே உணவருந்தச் செல்வர் பெரியோர். 303

உயர்ந்தவன், தனக்குத் தெய்வபலம் குன்றி இலக்குமி யின் அருளும் இல்லாத போது, சினம் கொண்டு தனது பெருமையை நினைத்துப் பார்த்து, செல்வத்தைச் சேர்த்து வைத்திருக்கும் மூர்க்கர்களிடம் சென்று ஒரு பொழுதும் தலைவணங்கி நிற்கமாட்டான். 304

தன்னிடம் உள்ளதைக் கொடுத்து அன்போடு நண்ப ராய்ப் பழகும் நல்லோரிடமும் இரக்காமல் வாழ்வது தான் சிறந்த வாழ்க்கை. இரத்தலை நினைத்தாலே மனம் எரிகிறது. அதைச் செய்யும் பொழுது அவர் மனம் எவ்வாறு துயரப் படுமோ? யாருக்குத் தெரியும்? 305

துயரம் வந்து அடையட்டும். இன்பம் விலகிச் செல்லட் டும். என்று எண்ணி மனதிலே ஒரு திருப்தி ஏற்படுமானால் வறுமை தானாகவே நீங்கிவிடும். அதற்காகக் கவலையுற்று ஒளி இழந்து பிறரிடம் சென்று ஏன் கை நீட்ட வேண்டும்? 806

மலைகளிலே பொன்னோடு சேர்ந்து பெருகி வரும் அருவி களைக் கொண்ட நாட்டின் தலைவனே! உலகில் மக்கள் நாள் தோறும் பிறந்து கொண்டே இருக்கின்றார்கள். அவ்வித உலகில் வறியவனைப் பழிக்காத ஒருவன் மாத்திரம் பிறவி எடுக்காமல் நற்கதி பெறுகிறான். 307

வறுமையை வெளிப்படுத்தும் குன்றிய உடலுடன், நல்லறிவு இழந்து அஞ்ஞானம் பெற்று, பணக்காரனை அண்டி 'கொடு' என்று கேட்டு, இல்லையென பதில் பெற்ற பிறகு ஒருவன் அவ்விடத்திலேயே இறந்துவிடுவான் அல்லவா? 308

ஏழை, பணக்காரனை அண்டி உறவாடி அடிபணிந்து இருப்பதில் குற்றம் ஒன்றுமில்லை. ஆனால் பிரபு, ஜாடை

அறிந்து அவனுக்கு உதவாத போது, வெட்கங்கெட்டு அவனிடம் ஏதாவது உதவுங்கள் என ஏழை கேட்பதைவிட வறுமையால் வாடுவது இன்பம் தரவல்லது. 309

பழக்கமுள்ள ஒருவன் தன் நண்பனிடம் வரும் பொழுது சொல்லாமலேயே அவனுக்கு உதவ வேண்டும். இல்லையேல் அது வந்தவன் மனதில் வேர் ஊன்றி எரிக்கும் நெருப்பாய் உருவெடுக்கும். 310

# 5. பொதுவியல்

அதிகாரம்-32 சபையின் தன்மை

அறிஞர்களின் அவையிலே நல்லவைகளைக் கேட்டுத் தெரிந்து கொள்ளாமல் விவேகமற்ற சொற்களைப் பயன் படுத்தி, அதைச் சாதிக்க முன்வரும் மூடர்களுடைய முன்னிலையிலே அறிஞர்கள் ஞானமொழிகளைக் கூறமாட்டார் 311

சம்பந்தமில்லாமல் வாயில் வந்ததையெல்லாம் சொல்லி எல்லாம் அறிந்தவன் போல் போலி வேடம் போடுகிறவர்களிடம் உண்மை அறிவாளர்கள் பேசமாட்டார்கள். ஏனெனில் போலிப்பண்டிதன் அறிவாளிகளின் குலத்தைப் பழிக்க முன்வருவான். அல்லது தோள் தட்டி அவர்களைப் போர் செய்ய வலிய அழைப்பான். 312

மற்றவனுடைய அறிவு, கற்பிக்கும் திறமை இவைகளை உணராமல், அறிந்தவற்றைப் பிறருக்குத் தெளிவாய் எடுத்துச் சொல்லும் திறமையைப் பெறுமல், தோல்வி அடைவதையும் தெரிந்து கொள்ளாமல் வாதம் செய்ய விரும்பி அவையிலே வீணே பல சொற்களைச் சொல்ல பலர் முன் வருகிறுர்கள். 313

குருவிடம் கற்காமல் சக மாணவன் உருப்போடுவதைக் கேட்டு ஓரிரு சூத்திரத்தை மாத்திரம் உணர்ந்து வெட்கமின்றி அவைகளை அவையிலே சொல்லித் தமது புல்லறிவை வெளிப்படுத்துவான் மூடன். 314

உண்மைப் பொருளை உணராமலேயே வெற்றியை மாத்திரம் குறியாகக் கொண்டு கோபித்து அவையில் மனக் கொதிப்போடு எழுகிறவர்களிடம் தனது சொற்றிறமையை நல்லோர் காட்ட முன் வந்தால் அவர்களின் கையால் அடி பட்டு சுரைக்காய் விதை போன்ற பற்கள் உடைந்து தம் கையிலே விழ நேரிடும். 315

உட்கருத்தை உணராமல் பாட்டை மாத்திரம் கிளி போல் சொல்லிப் பிறர் மனதைப் புண் படுத்தும் வகையிலே தரக்குறைவாகப் பேசுவர் அறிவிலிகள் இவனைப் பெற்ற தாய் எங்கு வருந்துவாளோ என இரங்கி இப்பேச்சைப் பொருட் படுத்தாமல் விட்டு விடுவார்கள் புகழ் பெற்ற பெரியோர்கள். 316

பொருளைக் கொடுப்பவர்களுக்கு எல்லாம் சுலபமாகக் கிடைக்கும் தாசிகளின் தோள்களைப் போல் சாஸ்திரங்களின் பொதுக் கருத்துக்கள் கற்க முன் வருபவர்கள் அனைவருக்கும் எளிதில் விளங்கக் கூடியவை, ஆனால் சாஸ்திரங்களின் உட்கருத்துக்கள், அழகிய பெண்களின் உள்ளம் போல் யாராலும் அறிய முடியாதவைகள். 317

நூல்களை மாத்திரம் சேகரித்து, நூற் பொருளை உணராமல் வீட்டை நிரப்புகிறவர்கள் உண்மைப் புலவர்களாக ஆக மாட்டார்கள். நூற்களைப் படித்துப் பொருள் உணர்ந்து பிறருக்கு எடுத்துச் சொல்கிறவர்களே உண்மைப் புலவர்களாகக் கருதப் படுவர். 318

காட்டுப் பசுக்கள் நிரம்பிய மலைகளால் சூழப்பட்ட நாட்டின் தலைவனே! நான்கு வகையான உரைகளை வைத்து

நன்கு ஆராய்ந்து நூலின் கருத்தை விளக்க முடியாதவர்களுடைய உரை, ஒரு நூலுக்கு உண்மையான உரை ஆகாது. 319

சாஸ்திரங்கள் அனைத்தையும், கற்றுணரும் நற்குடிப் பிறவாதவர், சபையில் பிறர் சொற்களிலுள்ள குற்றங்களைக் கண்டு பொறுக்க மாட்டார்கள். நற்குடிப் பிறந்த நல்லறிவாளிகள், சாஸ்திரங்களைக் கல்லாதவர்களுடைய சபையிலே கூறப்பட்ட குற்றமுள்ள சொற்களையும் பொருட்படுத்த மாட்டார்கள். 320

# 6. பகை இயல்

அதிகாரம் 33 போலி அறிவாளன்

கருணையோடு தர்ம உபதேசம் செய்யும் அன்பர் ய சொல்லைக் கற்றோர் பயனுள்ளதாக எண்ணி ஏற்றுக் கொள்வர். ஆனால், சட்டியில் கொதிக்கும் பால் சோற்றின் சுவையை அதிலேயே உள்ள ஆப்பை அறியாதது போல் அறிவிலி அச் சொல்லின் பயனை அறியாதவனாய் பேசுவான். 321

நல்லோர் செய்யும் தர்ம உபதேசங்களை அறிவில்லாதவன் பொறுமையோடு காது கொடுத்துக் கேட்கவும் முன் வர மாட்டான். புலையர் வீட்டிலே வளர்ந்து தோலைத் தின்று பழகிய நாய்க்குப் பால் சோற்றின் சுவை எப்படித் தெரியும்? 322

கண் மூடித் திறப்பதற்குள் உயிர் மறையக் கூடியது என்பதைப் பல வழியில் உணர்ந்தும் சிறிதளவு நல்ல காரியத்தையும் செய்யாத வெட்கமற்ற புல்லறிவாளர்கள் இறப்பதால் ஒரு கேடும் இல்லை; வாழ்வதால் ஒரு பயனும் இல்லை. 323

உயிர் வாழ்வது சில காலம். அது தவிர்க்க முடியாதது. அதிலும் பழிச் சொற்கள் பல கேட்க வேண்டி வரும். எனவே உள்ளவரையில் அனைவருடனும் இன்பமாய்க் கூடி வாழாமல் தனித்து இருந்து பிறரோடு பகை பாராட்டுவதில் பயன் என்ன? 324

அவையில் அறிவில்லாத ஒருவன் மற்றவனைப் பழித்துப் பேசும் பொழுது, பழிக்கப்பட்டவன் வாளாயிருந்தால் பழித்தவன் அழிவது திண்ணம். அப்படியும் அவன் அழியா மல் இருந்தால் அது வியக்கத்தக்க விஷயமாகும். 325

முதுமை வருவதற்கு முன் அறப்பணியில் ஆர்வம் காட்டி முயற்சி செய்யாதவன் இறுதி நாட்களில் ''வீட்டை விட்டு வெளியேறு, வெளியில் நில்'' என வேலைக்காரியாலும் கடினச் சொல்லுக்கு இலக்காகி வீட்டிலேயே வருந்திக் காலம் கழிப்பான். 326

செல்வத்தைத் தான் அனுபவிக்காமல், தக்கவருக்குக் கொடுக்காமல், மறுமைக்கு வழி தேடாமல், அறிவு மழுங்கி, செல்வத்திலேயே எப்பொழுதும் மூழ்கி இருந்து, வீணே வாழ்நாளைக் கழிப்பர் சிற்றறிவுடையோர். 327

இளமையில் மறுமைக்குத் தேவையான தருமமாகிய சோற்று மூட்டையைத் தயார் செய்து வைத்துக் கொள்ளா மல் பிறகு பார்க்கலாம் என்று எண்ணும் மூடர்கள், இறுதி யில் வாயடைத்துப் பேச முடியாமல் ஜாடை காட்டி தம் விருப்பத்தைப் பூர்த்தி செய்து கொள்ள முடியாமல் போய் விடுகிறார்கள். 328

பசி, பிணி இவ்விரண்டும் வந்தபோது சிற்றறிவு உடை யவன் தரும காரியத்தைச் செய்ய நினைக்கிறான். அவ் விரண்டும் போன பொழுது கடுகளவேனும் தருமத்தைச் செய்ய நினைப்பதில்லை. 329

அறம் செய்வதற்கேற்ற உடல் வலிவு பெற்று இருக்கும் புல்லறிவாளர்கள், தம் உயிரைப் போல் நேசிக்கும் உறவினரைக் காலன் கவர்ந்து செல்ல முயலுவதை நேரிடையாகக் கண்டும் தருமத்தை நினைத்துக்கூடப் பாராமல் வாழ்நாளை வீணாகக் கழிக்கின்றனர். 330

அதிகாரம் —34 யாதும் அறியாமை

கொலைகார எமன் உயிரை எடுத்துச் செல்லக் காத்துக் கொண்டு இருக்கையில் வாழ்க்கை எனும் வலையில் அகப்பட்டு மனிதன் களிப்போடு இருத்தல், அடுப்பிலே வைத்த உலைமீது கொலையாளியால் போடப்பட்ட ஆமை, தனது அழிவை அறியாமல் அந்நீரிலேயே விளையாடுவதற்கு ஒப்பாகும். 331

[illegible]ம்பத்திற்குத் தேவையான காரியங்களை முடித்து விட்டுப் பிறகு அறத்தைப் பற்றி சிந்திப்போம் என நினைப்பவனும், கடலோசை ஓய்ந்த பிறகு அதில் நீராடுவோம் என எண்ணிக் காத்திருப்பவனும் ஒன்றேயாகும். 332

படிப்பு, முதுமை, தவம், செல்வம், குலம், ஆகிய ஐவகைச் சிறப்புகளைப் பெற்ற ஒருவனுக்கு மாசற்ற சிறந்த பெருமை வாய்ந்த மேலுலக அறிவு இல்லையேல், நெய் கலக்காத வெண்சோறு போல் அவன் வாழ்க்கை வீணேயாகும். 333

பிறருடைய பேச்சைப் புரிந்து கொள்ள, ஒரு பாறாங்கல்லுக்குத் தகுதியில்லை. எனினும் அது அண்டி வந்தவர்களுக்கு நிற்கவும், படுக்கவும், உட்காரவும் இடமளித்து உதவுகிறது. ஒன்றுக்கும் பயன்படாத மட்டரகமான மனிதனை விடப் பலவகையில் பாறாங்கல்லே பயனுள்ளதாய் விளங்குகிறது. 334

பயனும் இன்றி நல்லோர் விஷயத்தில் அடுக்கடுக்காய்த் தீய சொற்களைக் கோத்து, கோபத்தோடு உரைத்து அதை விளக்கவும் செய்வர் மூடர். இல்லையேல் அவர்களுடைய நாக்கில் உள்ள தினவு அடங்காது. 335

புன்னை மலர்கள் பூத்துக் குலுங்கும் கடற்கரைக்கு உரியவனே! தன்னிடம் அன்பில்லாத ஒருவனை அன்புடையவனுக்க முயற்சி செய்யும் ஒருவனுடைய நிலை, கையால் கல்லைக் கிள்ளிக் கைவலியைத் தேடிக் கொள்பவனுக்கு ஒப்பாகும். 336

பாத்திரத்திற்குள் இருக்கும் நெய் தனக்குக் கிட்டாதது எனத் தெரிந்தும் விடாது எறும்பு அதைச் சுற்றி வருவதைப் போல் கொடுக்க மனமில்லாத பணக்காரனை, மக்கள் நீங்காமல் எப்பொழுதும் சூழ்ந்து கொண்டிருப்பர். 337

மூடன் நல்லோர் சபையை நாடுவதில்லை. அறமும் செய்வதில்லை. எளியோருக்குத் தானம் செய்வதில்லை. பண்புள்ள மனையாளைச் சேர்ந்து வாழ்வதில்லை. புகழுள்ள வாழ்க்கையும் நடத்துவதில்லை. இந்நிலையிலும் அவனுக்கு வாழ்நாளிலே வெறுப்பு ஏற்படுவதில்லை. காரணம் என்னவோ தெரியவில்லை. 338

தானாக வந்து புகழ் பாடும் நல்லோரைப் புறக்கணித்துத் தள்ளும் மூடனுடன் கொள்ளும் நட்பு, கடல் சூழ் மண்ணுலகம் யாவையும் பரிசாகப் பெற்றாலும் இன்பம் தருவதாக இல்லை. 339

ஒருவனிடம் உள்ள கல்வி, பண்பு, குலச் சிறப்பு ஆகியவற்றை மற்றொருவன் எடுத்துச் சொல்வதில் தான் பெருமை உண்டு. தன் பெருமையைத் தானே எடுத்துரைப்பவனை தீராப் பைத்தியக்காரன் என மக்கள் ஏச முன் வருவர். 340

அதிகாரம்—35 கீழ் மக்களின் செயல்

கொறிப்பதற்கு அரிசி, நொய் சித்தமாய் சமயத்தில் கிடைக்கப் பெற்றாலும் குப்பையைக் கிளரும் தொழிலைக் கோழி விடுவதில்லை. அதே போல் பெரியோர்களிடமிருந்து சாஸ்திரார்த்தங்களைக் கேட்டுணர்ந்த பிறகும் மனம் போன போக்கில் வரம்பு கடந்து ஏதாவது ஒன்றைச் செய்வான் கீழ்த்தரமானவன். 341

"சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்த குற்றமற்ற நல்லோரிடம் செல்வோம் வாருங்கள்" என்று கூறி அழைப்பவனை மதியாது, உறங்கச் செல்வான் கீழ்க்குடி மகன். ஏதாவது போலிக்காரணம் காட்டிச் சமாதானமும் கூறுவான் அவன். 342

அருவிகள் நிரம்பப் பெற்ற நாட்டிற்கு நாயகனே! செல்வம் வந்திடினும் இயற்கைக் குணம் மாறாமல் ஒரே வகையாக நடந்து கொள்வர் நல்லோர். செல்வம் கிட்டியவுடன் அற்பனுடைய போக்கே மாறி, புதியவனாகக் காணப் படுவான் அவன். 343

பிறர் செய்த தினையளவு சிறிய உதவியையும் பெரியோர் பனையளவு பெரியதாக எண்ணி இன்பம் எய்துவர். பனையளவு பிறர் செய்த பெரிய உதவியையும் நன்றி கெட்டவன் பெரியதாக எண்ண மாட்டான். 344

தங்கக் ல் வைத்த அன்னத்தை ஊட்டி வளர்த்த நாய், பிறர் எச்சிலைத் தின்ன சமயம் பார்த்துக் காத்திருப்பதைப் போல், பல சிறப்புகளைப் பெற்ற கீழ் மகன் சிறுமை அளிக்க வல்ல காரியங்களையே செய்ய முயல்வான். 345

உலகை ஆளும்படியான செல்வம் கிட்டினும் வரம்பு மீறிப் பெரியோர் பேச மாட்டார். சிறிதளவு செல்வம்

கிட்டியவுடன் தன்னை தேவேந்திரனாகவே நினைத்து விடுகிறான் அற்பன். 346

தங்கத்திலே ரத்தினங்களை இழைத்துத் தயார் செய்த செருப்பு, காலுக்கு போடத்தான் உதவும். அதே போல் செல்வம் கொழித்திருந்தும் தனது செய்கையைக் கொண்டு கீழ் மகன் கீழ் மட்டத்தில் வைக்கத் தக்கவனே. 347

கடுமையான சொல், இரக்கமின்மை, பிறர் துயர் க களித்தல், அடிக்கடி கோபம் கொள்ளுதல், பயனின்றித் திரிதல், பிறரைப் பழித்தல் ஆகிய இவ்வனைத்தும் கீழ் மக்களுடைய இயல்பான குணங்களாகும். 348

தேன் சுரக்கும் நெய்தல் மலர் நிரம்பிய குளிர்ந்த கடற்கரைக்கு உரியவனே! ஒரு நாள் தன் பக்கம் வந்து நிற்பவனையும், பல நாள் பழகிய நண்பனாகவே எண்ணி அவனிடம் அன்பு கொள்வான் உயர்ந்தவன். பல நாள் தன்னை அண்டி நின்றவனையும் வெறுத்துத் தள்ளுவான் கீழ் மகன். 349

ளம் புல்லை அறுத்துக் கொடுத்து வளர்த்த காளை, தேரைத் தாங்கி இழுக்கும் தகுதி பெறாது. அவ்வாறே நிறைந்த செல்வம் கிடைக்கப் பெற்ற கீழ் மகனும் தனது செயலால் உயர்வு பெற மாட்டான். 350

## அதிகாரம் 36 கயமை

அறிவாளிகள் இளமையிலேயே புலன்களைப் பொருள்களில் செல்லவொண்ணாமல் தடுத்து அடக்கி ன்புறுவார்கள். அறிவில்லாதவர்கள் வயதான பிறகும் நீய செயல்களிலே இறங்கித் தீய வழியிலே சென்று, பமின்றி வருந்துவார்கள். 351

நீர் நிரம்பிய குளத்தில் எப்பொழுதும் மூழ்கிக் கிடக்கும் தவளையின் உடலிலுள்ள அழுக்கு அகலுவதில்லை.

மாசற்ற பல சாஸ்திரங்களை விடாது கற்ற ஒருவனுக்குப் பகுத்தறிவு இல்லாவிடின் உண்மையை ஆராய்ந்து அவனால் உணர முடிவதில்லை. 352

மலைகள் நிறைந்த நாட்டின் நாயகனே! ஒருவனுடைய நற்குணங்களை தலை மறைவில் சொல்லுவதற்குக் கூட எவருக்கும் நாக்கு எழுவதில்லை. ஆனால் எதிரில் நின்று அவனுடைய குணங்களை அடியோடு மறைக்க வல்ல குற்றங்களை மாத்திரம் கூறிப் பழிக்கும் கீழ்த் தாமானவனுடைய நாக்கு, எப்பொருளைக் கொண்டு செய்யப்பட்டதோ தெரியவில்லை. 353

தாசிகளைப் போல் தமது பெண்மையை நன்கு அலங்கரித்துக் கொள்ள அகன்ற அல்குலை உடைய குல மகளிருக்குத் தெரியாது. தன்னைத் தானே ஒப்பனை செய்து கொண்டு தன் பெண்மையின் அழகைப் பெரிது படுத்தி ஆடவருடன் கூடிக் களிப் பெய்துவர் தாசிப் பெண்கள். நல்லோர், தீயோர் விஷயத்திலும் இதே நிலை தான். 354

கீழ் மக்கள் பிறரால் தூண்டப்பட்டு எக் காரியத்திலும் இறங்குவர். பரோபகாரத்தைத் தம் கொள்கையாகக் கொண்ட பெரியோர்களுக்கு ஒரு உதவியையும் இவர்கள் செய்ய மாட்டார்கள். தமக்குத் தீங்கு விளைவிப்பவர்களுக்கு எல்லா விதமான உதவியையும் செய்ய முன் வருவர். 355

வேடன் தனக்கு இருப்பிடமான மலையின் செழிப்பை நினைத்துக் கொண்டிருப்பான். தனக்கு வாழ்வளித்த பயிர் நிரம்பிய நிலத்தை எண்ணியிருப்பான் உழவன். பிறர் செய்த உதவியை நினைத்துக் கொண்டிருப்பார்கள் பெரியோர்கள். பிறர் ஒருகால் தம்மைப் பழித்த நிகழ்ச்சியை நினைத்துக் கொண்டிருப்பர் கீழ் மக்கள். 356

முதலில் ஒரு உதவி செய்தவர் பிறகு நூறு தீங்குகளைச் செய்தாலும் அதைப் பொறுத்துக் கொள்வர் நல்லோர்.

ஒருவன் முதலில் ஒரு தீங்கு செய்து விட்டுப் பிறகு எழுநூறு நன்மைகளைச் செய்தாலும் அவ்வளவையும் மறந்து விடுவர் கீழோர். 357

வாள் போன்ற கண்களை உடையவளே! தனது பற்களுக்குப் பூண் கட்டிக் கொண்டாலும் பன்றி, யானை போல் போர் செய்யும் வீரத்தைப் பெற முடியாது. அவ்வாறே வறுமையிலும் நல்லோர் செய்யும் நற்காரியத்தைக் கீழ் மக்கள் செல்வம் நிறைய வந்த காலத்திலும் செய்ய மாட்டார்கள். 358

இன்றே செல்வம் வந்து விடும், அல்லது இப்பொழுதோ சில காலம் கழித்தோ வரலாம் என்று சொல்லிக் களிப்பெய்தி முடிவில் ஏமாற்றத்தோடு மன மாற்றம் கொண்டு தாமரை இலை போல் பலர் அழிந்து இருக்கின்றனர். 359

நீரில் உண்டாகிப் பச்சை நிறம் கொண்ட கோரையின் உள்ளே ஈரம் புகுவதில்லை. அவ்வாறே ஏராளமான செல்வம் இருப்பினும், சிறிதும் உள்ளத்திலே இரக்கமின்றி கல் நெஞ்சம் படைத்தவர்கள் பலர் உலகில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். 360

# 7. பன்னெறி இயல்

## அதிகாரம் 37 — பல நீதிகள்

மேக மண்டலத்தை அளாவும் உயர்ந்த கோபுரங்கள். அதற்குத் தகுந்ததோர் பாதுகாப்பு, விளக்கு போல் ஜொலிக்கும் அணிகலன்கள்—இவைகளை அணிந்த மங்கையரும் அங்குண்டு. ஆனால் நேசிக்கும் தகுதி, நற்பண்பு இவைகள் அவர்கள் இடத்தில் இல்லையேல் என்ன பயன்? அவன் வீடும் சுடுகாட்டிற்குச் சமம். 361

வாளேந்திய கையுடன் காவலாளிகள் காத்திருக்கும் போதும் பெண்கள் ஒழுக்கத்திலிருந்து தவறி விடுவார்கள். ஆனால் இனிமையாய்ப் பேசும் அப்பெண்கள்,ஒழுக்கத்தோடு வாழ்ந்த நாட்களைவிட ஒழுக்கம் தவறிக் கழித்த நாட்கள் தான் அதிகமானவை என்று நாம் முடிவு செய்ய வேண்டும். காவலில் வைக்கப் பட்டுள்ள பெண்களுக்கும் மனத்தால் குற்றம் செய்ய வாய்ப்பிருப்பது தான் அதற்குக் காரணம். 362

''என்னை அடி'' என்று கணவனை எதிர்த்துப் பேசுகிறவள் அவனுக்குக் காலன் போன்றவள். காலையில் சமையல் அறையில் புகாதவள் தீராப்பிணி போன்றவள். கணவனுக்கு இடாமல் தான் மாத்திரம் உண்பவள் பிசாசு போன்றவள். இம்மூவகைப் பெண்களும் கணவனை மாய்க்க வந்த படைக்கு ஒப்பானவர்கள். 363

'இல்லறத்தை விடு' என்று சொல்லக்கேட்டும் விடாமல், சாவுத்தப்பட்டையின் ஒலி கேட்டும் உண்மை உணராமல், மறுமணம் செய்து கொண்டு களிப்போடு காலம் கழிப்பவனுடைய மயக்கமானது, தன் கையால் தன் தலை மேல் கல்லைப் போட்டுக் கொள்ளும் மயக்கத்தையொத்திருக்கும். 364

தவ ஒழுக்கத்திலே முயன்று வாழ்வது ஒருவனுக்கு முதல் தரமான செயல். பண்புள்ள மனைவியுடன் வாழ்வது நடுத்தரமான செயல். தன் மதிப்புத்தெரியாதவனின் பின்னால் பணத்திற்காகச் சென்று நிற்பது கீழ்த்தரமான செயலாகும். 365

நல்ல நூல்களைப் படித்துக் காலம் கழிக்கின்றனர் உயர்ந்தோர். கிடைத்த பொருளை அனுபவித்துக் காலம் [illegible]ப்பவர் நடுத்தரமானவர். உணவும், செல்வமும் இன்னும் கிடைக்கவில்லையே என்ற ஏக்கத்தால் சினம்கொண்டு தூக்கமின்றிக் காலம் கழிக்கிறார்கள் கீழ்மக்கள். 366

வயலில் நடப்பட்ட நெல் முளைகள். பயிராகி மறுபடியும் நெல்லாகவே வெளிவருகின்றன. அவ்வித நெற்பயிர்கள் நிரம்பிய வயல்களால் சூழப்பட்ட நாட்டின் தலைவனே! தந்தையின் அறிவைத் தனயன் பெறுவது போல், மூலப் பொருளின் குணத்தை விளையும் பொருளிலே காணலாம். 367

பரம்பரைப் பணக்காரர்களும், நற்பண்பாளர்களும் தம் நிலை தவறி வாழ்கிறார்கள். வைப்பாட்டி மைந்தர்களும் அறிவற்ற கீழ்மக்களும் செல்வத்தால் உயர்வு பெறுகிறார்கள். இவ்வாறு குடையின் காம்பு போல் உலகம் தலைகீழாய் மாறிக் காட்சி தருகிறது. 368

ரத்தினங்களைச் சுமந்து கொண்டு வரும் அருவிகள் நிரம்பிய மலைகள் கொண்ட நாட்டின் நாயகனே! ஆருயிர் நண்பனின் மனத்துயரத்தைக் கேட்டு அதைத் துடைக்க மனமில்லாத கல் நெஞ்சக்காரர்கள் உலகில் வாழ்வதைவிட, மலை உச்சியில் இருந்து வீழ்ந்து உயிர் மாய்த்துக் கொள்வது நலம். 369

அலசிப்பார்த்தால் புது வெள்ளமும், தாசிப் பெண்களின் அன்பும் ஒரு வகையாகவே காணப்படும். மழை குறைந்த பிறகு புது வெள்ளம் ஏது? பணவரவு குறைந்த பிறகு தாசிகளின் அன்பு எங்கு நிலைத்திருக்கும்? 370

# இன்பதுன்வியல்

அதிகாரம் — 38 பொது மகளிர்

அமைதியாய்ஆராய்ந்து பார்த்தால் தாசிகளின் அன்பும், விளக்கொளியும் ஒன்ருகவே தோன்றுகிறது. ஏனெனில் நெய் குறைந்தவுடன் விளக்கொளி மங்கி விடுகிறது. பண வரவு குறைந்தவுடன் தாசிகளின் அன்பும் குறைந்து விடுகிறது. 371

பணத்தைப் பெறும்பொழுது நாம் இருவரும் வறுமை வந்தால் மலையிலிருந்து ஒன்ருகவே விழ வேண்டும் என்று கூறி அன்று போலி அன்பு காட்டினுள் தாசிப் பெண். இன்று வறுமை வந்து அக்காரியத்தைச் செய்ய அழைத்த பொழுது வாத நோயால் என்னுல் நடக்க முடியாது என்று பொய் சொல்லி ஏமாற்றி விட்டாள் அவள். 372

சொர்க்கத்தில் வாழும் தேவர்கள் போற்றும் செங்கண்ணனுன மகாவிஷ்ணுவாக இருந்தாலும் கையில் பணமில்லையேல் தளிர் போன்ற அழகிய விலைமாதுகள், அவனை வணங்கி வந்த வழியே அனுப்பி விடுவர். 373

நீலமலரை ஒத்த கண்களை உடைய அன்பில்லாத வேசிகள் பணமில்லாதவனை விஷம் போல் எண்ணி வெறுத்துத் தள்ளுவர். செக்கு இழுத்துப் பிழைப்பவனிடம் செல்வம் இருப்பின் அவனை சர்க்கரை போல் விரும்பிப் பழகுவர். 374

தன்னை விழுங்க வரும் பாம்பிற்குப் பாம்பாகவும் மீனுக்கு மீனுகவும், மாற்றி, மாற்றி உடலைத் திருப்பிக்

காண்பித்து ஏமாற்றித் தப்பித்துக் கொள்ளும் திறமை, விலா மீன்களிடம் உண்டு. அதே போல் ஆளுக்கு ஏற்றபடி அன்பைக் காட்டி ஏமாற்றும் தாசிகளின் தோள்களை பகுத்தறிவு அற்றவர் விரும்புவர். 375

''நூலும், மணியும் போலும், இரட்டை கிரவுஞ்சப் பறவை போலும் நாம் இருவரும் சேர்ந்து இருப்போம்'' என அன்று பணமுள்ள போது விலை மாது கூறினாள். வறுமை வந்த இன்று போர் புரியவல்ல ஆட்டுக் கடாவின் கொம்பு போல் மாறுபட்ட எண்ணமுடையவளானாள். ஏ மனமே! சொல்; அவளிடம் இருப்பாயா? அல்லது என்னிடம் வருவாயா? 376

பசு, மனிதனை நக்கி ஏமாற்றுவது போல் ஆண்களை மயக்கி பணத்தைப் பறித்த பிறகு உழவுக்குப் பயந்து தரையில் படுத்துக் கொள்ளும் காளை மாடு போல் சமயத்தில் உதவாத வேசியரின் கபட அன்பை உண்மையென நம்புகிறவன் மக்களின் பழிக்குள்ளாவான். 377

காதலனிடம் இருந்து பொருளைப் பெறும் பொழுது அன்பு காட்டி நம்ப வைத்து பணம் பறி போனவுடன் அவனை ஏமாற்றும் கபட குணம் கொண்டவள் விலைமாது. நற்கதி பெற முயலும் நல்லோர் அவளது மார்பகங்களை விரும்பி ஏமாற மாட்டார்கள். 378

தீங்கு செய்யும் எண்ணம் உள்ளே மறைந்து இருக்கும். வெளியில் பேச்சு நம்பிக்கை அளிக்க வல்லதாக இருக்கும், இப்படிப் பட்ட அழகிய நெற்றியை உடைய தாசிகளின் பேச்சிலே மயங்கி ''இவள் எனது காதலி'' என்று எண்ணி யாவரும் மகிழ்வர். மகிழட்டும். உண்மையில் யாருக்கும் அவர்கள் சொந்தமானவர்கள் அல்ல, தமக்குத் தாம் சொந்தம், 379

அழகிய நெற்றியை உடைய வேசி, உள்ளத்தில் ஒருவனை நினைப்பாள். வெளியில் மற்றொருவனைக் காதலிப்பது போல் நடிப்பாள். இவ்வுண்மையை அலசிப் பார்க்கிறான் மனிதன். ஆனால் தீவினையின் பயனாய் அதை அவனால் அறிய மாத்திரம் முடிவதில்லை. 380

## இன்பவியல்

**அதிகாரம் 39** **கற்புடைய மங்கை**

கற்பிலே இந்திராணியைப் போல் புகழ் பெற்று இருப்பினும், ஆசையோடு தன்னை அண்டி வரும் ஆடவர்க்கு சிறிதும் இடங் கொடுக்காமல் உறுதி பெற்று இருக்கும் அழகிய நெற்றியை உடைய பெண்களே கணவனுக்கு உறு துணையாய் நிற்கக் கூடியவர்கள். 381

பானை ஜலத்தைப் பகிர்ந்து குடிக்கும்படியான வறுமை வந்த காலத்திலும், பல உறவினர்கள் திரண்டு வந்த பொழுதும் தனது கடமையை விடாது செய்யும் இனிமையாகப் பேசும் பண்புள்ள பெண்ணே குடும்பத்திற்குப் பொருத்தமானவள். 382

நாற்புறமும் உள்ளே நுழைய வழிகள். மேலிருந்து நாற்புறமும் மழை நீர் உள்ளே புகும்படியான அமைப்பு. இப்படிப்பட்ட சிறியதொரு வீட்டிலும் தனது கடமையைத் தவறாது செய்து மக்களால் போற்றப் படும் கற்புக் கரசி உள்ள வீடே உண்மை வீடெனப்படும். 383

இனிய தோற்றம், கணவனுடைய விருப்பப்படி தன்னை ஒப்பனை செய்து கொளளல், அச்சம், சுற்றத்தாருக்கு உதவி புரிதல், சமயம் அறிந்து பயத்தோடு கணவனுடன் ஊடியும், கூடியும் அவனுக்கு இன்பம் அளித்தல், இனிய சொல், ஆகிய நற்பண்புகள் கொண்டவளே மனைவியாவாள், 384

பல முறை கணவனுடன் கூடிக் களித்திருந்தாலும் புது உறவு கொள்வது போன்ற ஒரு வெட்கம் இன்றைக்கும் எங்களிடம் இயல்பாய் உள்ளது. பணத்திற்காகப் பலருடன் பழகி வரும் தாசிகள் பலர், கணவனிடம் உயிருக்குயிராய் நடந்து கொள்கின்றனர். இது என்ன மர்மமோ புரிய வில்லே. 385

நல்லறிவாளர்கள் கற்றறிந்த சாஸ்திரம் போலவும், தான குணம் உள்ளவனிடம் இருக்கும் செல்வம் போலவும், வீரனுடைய கையிலுள்ள வாளைப் போலவும் நாண குணம் உள்ள குலப் பெண்களின் பெருமை சிறந்து விளங்குகிறது. 386

சிகப்புக் கொள்ளுக்கும், கறுப்புக் கொள்ளுக்கும், வேற்றுமை அறியாத பட்டிக் காட்டான், இரண்டையும் ஒரே விலேக்கு ஒரே அளவாக வாங்கினுனும். அதே போல் எனக்கும் வேசிக்கும் உள்ள வேற்றுமையை அறியாத எனது தலேவன் வேசியை அனுபவித்து அசுத்தமான மார்போடு, நீராடித் தூய்மை பெருமல், என்னேயும் வந்து திண்டுகிருன். (விலே மாதிடம் சென்று வந்த தலேவனே தலேவி ஏசுவதாக அமைந்துள்ளது இப்பாடல்). 387

உடுக்கையின் வலது புறத்திற்குத் தான் முக்கியத்துவம் உண்டு. இடது புறத்திற்கு அவ்வளவு முக்கியத்துவம் கிடையாது. உடுக்கையின் இடது பாகம் போல் நாயகனேப் பிரிந்து யாம் பயனற்றுக் கிடக்கின்ருேம். பாணனே! வீணுக இங்கு வந்து தலேவனேப் பற்றி ஏசி வருத்தத்தை வளர்க் காதே. வந்த வழியே செல். வேண்டுமென்ருல் உடுக்கை யின் வலது புறம் போல் நாயகனுக்குப் பயனுள்ளவர்களாய் விளங்கும் வேசியரிடம் சென்று தலேவனேப் பற்றிஏசிப் பேசு. (தலேவனேப் பிரிந்த தலேவி, பாணனது பேச்சைக் கேட்கத் தாளாது ஏசுவதை இப்பாடல் குறிக்கிறது.) 388

ஒரு காலத்தில் பெண்ணீ எனது தலைவன் மேல் அமர்ந்தால் அதைக் கூடப் பார்க்கப் பொறுக்காமல் இருந்தவள் யான். இன்று வேசியைக் கலந்து அவள் மார்பகத்தில் இருந்த சந்தனம் பட்டுக் கறை ஏறிய என் து கணவனின் மார்பகத்தைப் பார்த்தும் பொறுமையாய் இருக்கிறேன். (தாசிலோலனைக் கண்டு தலைவி பொறுமை காட்டக்காரணம் யாது என்ற தோழியின் கேள்விக்குத் தலைவி சொன்ன பதில் இப் பாடலின் உட்பொருளாகும் ) 389

பாணனே! பூமாலை அணிந்த என் தலைவன் திரும்பி வருவான் என என்னிடம் பொய் பேசாதே. கரும்பின் நுனிப் பகுதி போல் நான் சாரமற்றவளாகி விட்டேன். கரும்பின். நடுக் கணுபோல் அவனுக்கு இனிக்கும் வேசியரிடம் சென்று இதைச்சொல்.(பாணனைக் கண்டு தலைவி கோபம் கொள்ளும் செய்தியை இப்பாடல் கூறுகிறது ) 390

## அதிகாரம் 40 காம நுதலியல்

அலைகளால் குளிர்ச்சி பெற்ற கடற்கரையின் தலைவனே! காதலர்கள் சேராத பொழுது உடலில் நிற வேறுபாடு ஏற்படும். எப்பொழுதும் காதலர்கள் கூடி இருந்தால் காமம் சுவை தராது. எனவே காமரசம் வளர்வதற்கு கூடிப் பிரிதலே சிறந்த வழியாகும். (தலைவியைப் பிரிந்து சேர்ந்த பிறகு தலைவன் தனக்குள்ளே எண்ணி மகிழ்வதை இப்பாடல் விளக்குகிறது.) 391

மாலை அணிந்த பரந்த மார்பினுல் மகிழ்ச்சி பொங்கத் தழுவும் தலைவன் ஒருவனைப் பெருத மகளுக்கு "சோவென

ஓசையோடு நான்கு திக்குகளிலும் மழை பொழியும் மேகங்கள் கர்ஜனை சாவுத் தப்பட்டையின் சத்தம்போல் செவியில் விழும். (மழைக் காலத்தில் சொன்னபடி திரும்பி வராத தலைவனை நினைத்துத் தலைவி வருந்தும் செய்தியை இப் பாடல் கூறுகிறது.) 392

மாலைப் பொழுதினிலே நல்ல மலர்களை தேர்ந்தெடுத்து மாலை கட்ட ஆரம்பித்தாள் தலைவி. மறுகணம் "தலைவன் இல்லாத பொழுது இம் மாலைக்கு என்ன பயன்" என்று எண்ணி மாலையைக் கீழே நழுவ விட்டு வருந்திப் புலம்பினாள் நாயகி. (தலைவனைப் பிரிந்த தலைவியின் துயரத்தைத் தோழி தலைவனிடம் கூறுவதை இப் பாடலில் காணலாம்). 393

மாலை நேரக் கதிரவனைக் கண்டு பெருக்கெடுத்து வரும் கண்ணீரை விரல்களால் துடைத்து அழுது சென்ற நாட்களை விரல் விட்டு எண்ணிப் படுக்கையில் கையைத் தலையணையாகக் கொண்டு படுத்துச் சொன்ன பேச்சைக் காப்பாற்றாத என் குற்றத்தை எண்ணி என் தலைவி வருந்துவாளோ? (பிரிந்த தலைவன் திரும்பிய பொழுது தலைவியின் நிலையைத் தோழனிடம் கூறியதை இப்பாடல் விளக்கு ி.) 394

எனது தலைவியின் கண்களை மீன் என எண்ணிய மீன் குத்திப் பறவை, அவளைத் தொடர்ந்து சென்று பிடிக்க முயன்ற போது அவளுடைய வளைந்த புருவத்தை வில்லாக நினைத்து வாளாயிருந்து விட்டது. (தலைவியின் கண்ணழகைக் கண்டு மயங்கிய தலைவன் அதைத் தோழனிடம் கூறியதாக அமைந்துள்ளது இப்பாடல்). 395

சிறந்த ஆம்பல் போன்ற வாயும், அழகிய இடையும் கொண்ட என் மகள், செம்பஞ்சிக் குழம்பைக் காலில் இட்டு ஒப்பனை செய்வதைக் கூடத் தாளாமல் வருந்துவாள். அவ் வித மெல்லிய கால்கள் எவ்வாறு கல் நிரம்பிய காட்டில் தலைவனுடன் நடந்து சென்றனவோ? (செவிலித்தாய் தன் மகளுடைய மெல்லிய பாதங்களுக்கு ஏற்பட்ட நிலையைப் பார்த்து வருந்துகிறாள் என இப் பாடல் கூறுகிறது.) 396

கணக்கர்கள் வேலையை முடித்து ஒய்வெடுக்கும் அமைதி யான செவ்வானம் காட்சி தரும் மாலைப்பொழுதிலே பிரிந்த நாயகனை நினைத்து வருந்தி, தான் அணிந்த மாலையைக் கழற்றி எறிந்து மார்பகத்தில் பூசிய சந்தனத்தைத் துடைத்து அழத் தொடங்கினாள் நாயகி. (நாயகன் மறைந்தி ருப்பதை அறிந்து, அவன் காதில் பட நாயகியின் நிலையை எடுத்துக் கூறுகிறாள் தோழி என்ற செய்தி இப்பாடலில் வருகிறது,. 397

தோழியே! காளையை ஒத்த தலைவனுடன் நாளைக்கே கானகம் செலலச் சித்தமாய் இருப்பாயா? என்று நீ என்னை வினவினாய். குதிரையை விலைக்கு வாங்குபவன் அதை ஏறிச் செலுத்த உடனே தெரிந்து கொள்ளவில்லையா? (தலைவி, தனக்குள்ள உறுதியைத் தோழியிடம் கூறுகிறாள் என்ற செய்தி இப்பாடலில் இடம் பெறுகிறது. 398

தான் அணிந்த முத்து மாலையும், கொங்கும் என் மீது படியும்படி என்னை என்மகள் அணைத்துக் கொண்டதற்குக் காரணம் முன்பு விளங்கவில்லை. மானைத் துரத்தும் சிங்கங் கள் நிறைந்த கானகத்தில் தன் பயணத்தை எனக்கு நினைவு

படுத்தவே இதைச் செய்தாள் என இப்பொழுது தான் உணருகிறேன். (மகளின் குறிப்பாலே கருத்தை அறிந்த தாயின் பேச்சை இப்பாடல் விளக்குகிறது.) 399

கொங்கு மலர் போன்ற மார்பகங்களை உடையவளே! என்னைப் பெற்ற தாய், முக்கண்ணன், ராகு என்ற பாம்பு இவைகளைப் பழித்துப் பயனில்லை. பொருள் தேட என் தலைவன் சென்ற அகன்ற வழியைத் தான் பழிக்க வேண்டும். (பிரிவுத் துயரத்தைத் தலைவி, தோழியிடம் கூறும் செய்தி இப்பாடலில் இடம் பெறுகிறது.) 400

நாலடியார் தெளிவுரை முற்றிற்று.

## BOOKS BY THE SAME AUTHOR

| | | |
|---|---|---|
| 1. | S. Krishna Leela—in Tamil | Rs. 1-25 |
| 2. | Ezhu Natakak Kathaigal (Short stories of Seven Sanskrit Dramas) | ... 1-25 |
| 3. | Tiruppavai in Sanskrit | ... 0-30 |
| 4. | Krishna Katha Sangraha (Skt, Poetry) | ... 1-00 |
| 5. | Desikamani Satakam (Skt. Poetry) (Life of Vedanta Desika) | ... 1-00 |
| | Authorship of Mahabharata—A critcism(Tamil) | 0-50 |
| | Vemana Padyamulu (in Sanskrit,Slokas) | ... 1-75 |
| | emana Padyangal (in Tamil) | ... 1-25 |
| | ana Padyamulu (in Sanskrit Slokas with ... Translation) | ... 3-00 |
| 10. | Bharatiyar's Works (in Sanskrit) | ... 3-00 |
| 11. | Kamba Ramayanam (in Skt.) Bala Kandam | ... 4-50 |
| 12. | Silappadikaram (in Skt.) Pukar Kandam | ... 5-00 |
| 13. | Avvaiyar Niti Works in Sanskrit) | ... 2-50 |
| 14. | Patthuppattu (in Sanskrit) (Ten Sangam Classics) | ... 2-50 |
| 15. | Ettuthogai in Sanskrit (Eight sangam classics) | .. 8-00 |
| 16. | Thirukkural in Sanskrit with Tamil and Eng. Translations (Porutpal) | ... 10-00 |
| 17. | Tirukkural in Sanskrit with English Translation (Porutpal) | ... 8-00 |
| 18. | Tirukkural with (Telivurai Porutpal) | ... 5-00 |
| 19. | Tirukkural in Sanskrit with Tamil & English Translations Arattuppal & Kamattuppal | ... 12-00 |
| 20. | Tirukkural with Tamil and English Translations (Porutpal) | ... 8-00 |

*Copies can be had of :*

**S. N. SRIRAMA DESIKAN**
**(AUTHOR)**
**32, Mannar Reddy Street, T. Nagar, Madras-17.**